# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

(மாதப் பத்திரிகை)

இந்தப் பத்திரிகைக்கு ஏஜெண்டுகள் நியமிக்கப்படாத ஊர்களுக்கு ஏஜெண்டுகள் தேவை. முன்பணம் கட்டக்கூடிய பத்திரிகை விற்பனையாளர்கள் தொடர்பு கொள்ளவும்.

**சந்தா விவரம்**

| | |
|---|---|
| வருட சந்தா | ரூ. 15 |
| ஆயுள் சந்தா | ரூ. 180 |
| தனிப் பிரதி | ரூ. 1-50 |

ஆயுள் சநதாவை மொத்தமாகவோ, பகுதி பகுதியாகவோ, மாதம் ரூ. 15 ஆகவோ ஒரு வருடத்திற்குள் செலுத்தலாம்.

வருட சந்தாதாரர்களை ஆயுள் சந்தாதாரர்களாகப் பதிவு செய்து கொள்வதன் மூலம் பத்திரிகையின் வளர்ச்சிக்கு உதவி புரியக் கோருகிறோம். ஆயுள் சந்தா என்பது 35 ஆண்டுகளுக்குப் பத்திரிகை அனுப்பப்படும் என்பதை குறிக்கிறது.

**வேண்டுகோள்**

1. மக்களுக்கு உணவு உடை வழங்கி உடல் சம்பந்தமான தவைகளைப் பூர்த்தி செய்வது மிகவும் நல்ல உதவி ஆகிறது. கல்வி, தொழில் முதலியவற்றைக் கற்பித்து ஜீவனோபாயத்திற்கு வழிவகுத்துத் தருவது அதனினும் மேலான சேவை ஆகிறது. ஆன்மிக சம்பந்தமான நூல்களைப் படித்தும் கேட்டும் ஆத்மசாதனங் களில் ஈடுபடச் செய்வது தலையாய கைங்கரியமாகிறது. தானங்களிலேயே மிகச் சிறந்த தானம் ஞானதானம் என்பது ஆன்றோர் கண்ட உண்மை.

வாசக அன்பர்கள் தங்களின் சந்தாவைச் செலுத்துவதுடன், மேலும் தமது நண்பர்கள் சிலரையும் சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தருவது ஒரு நல்ல தொண்டாகும். இந்தப் புனித மதத் தொண்டில் சிரத்தையுடன் ஈடுபடுவது நமக்கும் மற்றவர்களுக்கும் பெருநலன் தரும்.

2. அன்பர்கள் தங்களின் தெய்விகக் கைங்கரியமாக கல்வி ஸ்தாபனங்கள், சத்சங்கங்கள் முதலியவைகளுக்குப் பத்திரிகை போய்க்கொண்டிருக்கும்படி செய்ய லாம். இது ஒவ்வொரு மாதமும் தாங்கள் அளிக்கும் மேலான நன்கொடையாகவும், தங்களை ஞாபகப்படுத்தும் சிறந்த வெகுமதியாகவும் அமையும்.

3. அன்பர்கள் தங்களால் இயன்ற ஒரு சிறிதளவிற்காகிலும் புதிய சந்தா தாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் முயற்சி செய்வார்கள் என்று நம்புகிறோம். குறைந்தது மூன்று சந்தாதாரர்களையாவது சேர்த்துத் தருவது மிகப் பெரிய உபகாரமாக இருக்கும். இதன் மூலம் இன்றைய சமுதாயத்தின் சூழ்நிலையில் நல்ல கருத்துகள் வளர அரும்பெரும் தொண்டு செய்தவர்களாகிறீர்கள்.

4. புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பி வைக்கும்போது புதிய சந்தா என்று குறிப்பிட்டு எழுதும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். பழைய சந்தாதாரர்கள் தமது கடிதப் போக்குவரத்துகள் எல்லாவற்றிலும் சந்தா எண்ணையும் முழு விலாசத்தையும் அவசியம் குறிப்பிட்டு எழுத வேண்டுகிறோம்.


தொலைபேசி :
71231



விவரங்களுக்கு:
ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் : சென்னை-600 004

# ஸ்ரீராமகிருஷ்ணரின் அமுதமொழிகள்

மூன்று பாகங்கள்

ஒவ்வொரு பகுதியும் சுமார் 600 பக்கங்கள் கொண்டது.
டெம்மி சைஸ். காலிகோ பைண்டிங்.
(பிளாஸ்டிக் ஜாக்கெட்)

அமுதமொழிகள் முதல் பாகம் முழுவதும் தீர்ந்துவிட்டது. எனவே பல அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்க, இப்போது அமுதமொழிகள் முதல் பாகத்தை இரண்டாம் பதிப்பு வெளியிட்டுள்ளோம்.

**இப்பொழுது ஒரு செட் அமுதமொழிகளின் (மூன்று பகுதிகள்) சலுகை விலை ரூ. 65 மட்டுமே. இச் சலுகை ஜூன் மாதம் இறுதி வரை இருக்கும் (30-6-83).** மொத்தமாகவோ அல்லது இரண்டு தவணைகளிலோ (ரூ. 35; ரூ. 30) பணத்தைச் செலுத்தலாம். இரு தவணைகளில் செலுத்துபவர்கள் இரண்டாம் தவணையை 30-6-83க்குள் அனுப்பிவிட வேண்டும் என்று கோருகிறோம்.

அமுதமொழிகள் இரண்டாம் பாகம் இப்போது அச்சாகிக்கொண்டிருக்கிறது. பிரதிகள் வேண்டுவோர் விரைவில் தங்கள் பெயர்களைப் பதிவு செய்துகொள்ளுமாறு வேண்டுகிறோம்.

தலைவர்
**ஸ்ரீராமகிருஷ்ண மடம்**
மயிலாப்பூர், சென்னை-600 004


# GAIGHATA TORNADO RELIEF
# RAMAKRISHNA MISSION'S APPEAL

The heart-rending disaster caused by the devastating Tornado in Gaighata, West Bengal on the 12th April last is well known to all today. The colossal damage inflicted by nature on human beings, cattle, plantation and even cultivated lands beggars all description. Every sympathetic soul is eager to bring the dazed villagers back to their normal livelihood as quickly as possible. Ramakrishna Math and Ramakrishna Mission have started relief services among these unfortunate victims since the morning of the 14th April. Our relief operations are still continuing but the need is much more. Therefore, we appeal to the generous public for unstinted help for further assistance to the sufferers. A/C Payee cheques, Drafts or M.O. may kindly be sent in the name of 'Ramakrishna Mission' at Belur Math, Dist. Howrah Pin: 711202.

**SWAMI VANDANANANDA**
*General Secretary.*

# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

தொகுதி 63 | ஜூன்—1983 ருதிரோத்காரி ஸ்ரீ ஆனி மீ | இதழ் 6

பொருளடக்கம்

| | | |
|---|---|---|
| 1. | பிரார்த்தனை | ... 183 |
| 2. | ஸ்ரீராமகிருஷ்ணரின் அருள்வாக்கு | ... 184 |
| 3. | இந்தியாவின் இன்றைய நிலை—தமிழாக்கம்: அகிலா நாராயணசுவாமி | ... 186 |
| 4. | சிவனும் விஷ்ணுவும் ஒருவரே—வி. தியாகராஜன் | ... 190 |
| 5. | நன்மை செய்—திருமுருக கிருபானந்தவாரியார் | ... 193 |
| 6. | இறைவன் ஊரும் ஏறு—கி. வா. ஜகந்நாதன் | ... 195 |
| 7. | சிறுவர் பகுதி கதை: மகாகவி பாரவி—எஸ். கனகலட்சுமி | ... 198 |
| 8. | நூல் அறிமுகம் | ... 201 |
| 9. | மௌனம் | ... 202 |
| 10. | ஆன்மிக வினாவிடை—சுவாமி கமலாத்மானந்தர் | ... 204 |
| 11. | துளசிதாசரின் வேண்டுகோள்—எஸ். பி. ராஜகுமாரி | ... 206 |
| 12. | அருள்நெறிக் கதை: குபேரன் கொட்டிய தங்கம்—நாடோடி | ... 208 |
| 13. | அருள்நெறிக் கதை: ஒரு கிளியின் கதை—சத்தியகாமன் | ... 210 |
| 14. | திருத்தணிகை முருகன்—ராஜம் ஐயராமன் | ... 213 |
| 15, | தொண்டில் ஈடுபட ஒரு நல்ல வாய்ப்பு | ... 218 |

இந்த இதழின் அட்டைப் படம்: திருத்தணி முருகன் உற்சவ மூர்த்தி

உவகையுடன் வரவேற்கிறோம்......

தாங்கள் வங்கியிலிடும் வைப்புத் தொகையும்,
கால அளவும் எங்களுக்கு அளவுகோல் அல்ல.

அனைத்து வாடிக்கையாளர்களுக்கும் தனிக் கவனம்
அளிக்கப்படுகிறது. உங்களுக்குச் சேவை செய்யக்
காத்திருக்கிறோம். இன்றே வருகை தாருங்கள்.
விரைவும் பணிவும் மிக்க எங்கள் பணியினை உணர்வீர்கள்.

விபரங்களுக்கு எங்கள் கிளைகளை நாடுங்கள்.

**கரூர் வைஸ்யா பாங்க் லிமிடெட்**

பதிவு அலுவலகம்: கரூர்-639 001

ஜி. வெங்கடேசம், சேர்மன்

அந்நியச் செலாவணி வர்த்தகம் புரிய அங்கீகாரம் பெற்ற வங்கி.

## காந்தியடிகளின் பொன்மொழிகள்

* நல்ல காரியம் எதுவும் முடிவில் பயனளித்தே தீரும்.
* இறைவனது நண்பனுக இருக்க விரும்புபவன் இந்த உலகில் தன்னந் தனியாக இருக்க வேண்டும்.
* புற வாழ்க்கையில் உண்டாகும் மாறுதலேக்காட்டிலும், உள்ளத்தில் உண்டாகும் மாற்றமே முக்கியம்.
* தூய அன்பினுல் ஆகாத காரியம் ஒன்றும் இல்லே. ஒருவனுடைய நோக்கம் மட்டும் தூயதாய் இருந்தால் அவனே இறைவன் முடிவில் காத்தருள்வான்.
* நன்ருகச் சிந்தித்துப் பார்த்தோமானுல், ஜாதி இனம் என்ற வேறுபாடுகள் கற்பனேயே என்பது விளங்கும். உண்மையில் நாம் அனேவரும் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்களே யாவோம்.




அசோகா பாக்குத்தூள் கம்பெனி பிரைவேட் லிமிடெட்
''அசோகா பாக்டரி'', தபால் பெட்டி நெ. 3702
11/234, டாக்டர் நஞ்சப்பா ரோடு
கோயமுத்தூர்-641 018

A MONTHLY INCOME PLAN
Deposit once, earn every month
in
SOCIAL SECURITY DEPOSIT
Lead a happy retired life
SYNDICATE BANK
The dependable bank

நாற்பது ஆண்டுகளுக்கு மேலாக நாணயத்திற்கும் நம்பிக்கைக்கும் பெயர் பெற்றவர்கள்:

கௌரி ஜுவல்லரி மார்ட்

72-85, பைகிராப்ட்ஸ் சாலே, திருவல்லிக்கேணி,
சென்னே-600 005.

உரிமையாளர் : K. ராமலிங்கம் போன் : 842594



# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை.

—திருமூலர்

# பிரார்த்தனை

तापत्रयं मम हरामृत-दृष्टि-वृष्ट्या
पापं व्यपोहय गजानन चापदो मे ।
दुष्टं विधातृ-लिखितं परिमार्जयाशु
श्रीवल्लभेश ! मम देहि करावलम्बम् ॥

தாபத்ரயம் மம ஹராம்ருத-த்ருஷ்டி-வ்ருஷ்ட்யா
பாபம் வ்யபோஹய கஜாநந சாபதோ மே ।
துஷ்டம் விதாத்ரு-லிகிதம் பரிமார்ஜயாசு
ஸ்ரீவல்லபேச! மம தேஹி கராவலம்பம் ॥

—ஸ்ரீகணேச கராவலம்ப ஸ்தோத்ரம்

யானைமுகத்தோனே! எனது முன்வினைப் பயனுகப் பிரம்மா என் தலையில் எழுதிய கொடிய விதியை உடனே அழித்து, அமுதம் நிரம்பிய உனது கடைக்கண் நோக்கினுல் எனது பாவங்களையும் ஆபத்துக்களையும் போக்கிக் கைகொடுத்தருள் வாயாக.

அச்சுதன் அமலன் என்கோ!
அடியவர் வினை கெடுக்கும்
நச்சுமா மருந்தம் என்கோ!
நலங்கடல் அமுதம் என்கோ!
அச்சுவைக் கட்டி என்கோ
அறுசுவை அடிசில் என்கோ!
நெய்ச் சுவைத் தேறல் என்கோ!
கனி என்கோ! பால் என்கேனே!

—நம்மாழ்வார்







# ஸ்ரீராமகிருஷ்ணரின் அருள்வாக்கு

**ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்):** சிலர் கிருஷ்ணலீலைக்குத் தத்துவ முறையில் விளக்கம் தருகின்றனர். இதைப்பற்றி நீ என்ன நினைக்கிறாய்?

**ம-:** பலவிதமான கருத்துக்கள் கூறப் படுகின்றன. இருந்துவிட்டுப் போகட்டுமே. பீஷ்மர் அம்புப் படுக்கையில் படுத்திருந்தபொழுது அழுததற்கான காரணத்தை நீங்கள் கூறியிருக்கிறீர்கள். "பீஷ்மர் ஏன் அழுதார்? அம்பின் வேதனையால் அல்ல. சாட்சாத் நாராயணனே அர்ச்சுனனுடைய தேர்ப்பாகனாக இருந்தும், பாண்டவர்களின் துன்பங்களுக்கு விடிவு ஏற்படவில்லையே என்பதை நினைத்தும், இறைவனது லீலையைப் பற்றி ஒன்றும் அறிய முடியவில்லையே என்று நினைத்தும் கண்ணீர் விட்டு அழுதார்'' என்று கூறியிருக்கிறீர்கள்.

மேலும், அனுமனைப் பற்றியும் கூறியிருக்கிறீர்கள். அனுமன், ''திதி, நட்சத்திரம் இவை எதைப்பற்றியும் நான் நினைப்பது கிடையாது. எந்த நேரமும் என் நினைவெல்லாம் இராமரைப் பற்றியே'' என்று கூறியதாகத் தாங்கள் சொல்லியிருக்கிறீர்கள். ''பிரம்மம், சக்தி இவை இரண்டைத் தவிர வேறு எதுவுமே கிடையாது'' என்று நீங்கள் கூறியிருக்கிறீர்கள். ''பிரம்ம ஞானம் உண்டானால் இரண்டு என்பது இல்லை, எல்லாமே ஒன்றுதான் என்ற அறிவு உண்டாகிறது'' என்றும் தெரிவித்திருக்கிறீர்கள்.

**ஸ்ரீராமகிருஷ்ணர்:** ஆமாம். உண்மை தான். எப்படியாவது இலட்சியத்தை அடைய வேண்டும். முள் நிறைந்த வழியோ, நல்ல வழியோ—எந்த வழியிலாவது நடந்து ஒருவன் கடவுள் என்ற இலட்சியத்தை அடைய வேண்டும்.

நானக் சம்பிரதாயத்தைச் சேர்ந்த சாது ஒருவர் அங்கு வந்தார். அந்தச் சாது அருவக் கடவுளை வணங்குபவர். உருவக் கடவுளையும் வழிபடும்படி குருதேவர் அந்தச் சாதுவுக்குக் கூறினார்.

''ஆழ மூழ்கு. மேலே மிதந்தால் உள்ளே இருக்கும் இரத்தினம் கிடைக்காது. இறைவன் உருவமற்றவன், உருவம் உள்ளவனும்கூட. உருவத்தை நினைத்தால் விரைவில் பக்தி உண்டாகிறது. பிறகு உருவமில்லாத அருவக் கடவுளைத் தியானிக்கலாம். கடிதத்தைப் படித்து அதில் உள்ள செய்தியை அறிந்த பிறகு அதைத் தூர எறிந்துவிடலாம் அல்லவா? அதன் பிறகு கடிதத்தில் எழுதியிருப்பதற்கு ஏற்ப வேலையில் ஈடுபடலாம்.''

### ஞாயிற்றுக்கிழமை, டிசம்பர் 23, 1883

பிரம்மமே உலகமாகவும் ஜீவராசிகளாகவும் ஆகியிருப்பதை ஸ்ரீராமகிருஷ்ணர் தம் பிரிய சீடரான ம-விற்கு விளக்கத் தொடங்கினார்.

**ஸ்ரீராமகிருஷ்ணர் (ம-விடம்):** குறிப்பிட்ட ஓர் இடத்தைக் கூறி, 'அங்கு யாருமே இறைவனின் பெயரைப் பாடுவதில்லை' என்று ஒருவன் கூறினான். இதை அவன் கூறிய அளவிலேயே, இறைவன் ஒருவனே எல்லா உயிர்களாகவும் ஆகியிருப்பது எனக்குத் தெரிந்தது. தண்ணீரில் கணக்கற்றுத் தோன்றும் குமிழிகள் போலவும், நீரில் காணப்படும் பிரதிபிம்பங்கள் போலவும் இறைவன் விளங்குவதைக் கண்டேன்! மேலும், அவரே எண்ணற்ற சிறுசிறு உருண்டைகளாக இருப்பது போலவும் கண்டேன்.

ஒரு முறை கமார்ப்புகூரிலிருந்து பர்த்வானுக்குச் சென்றுகொண்டிருந்தேன்.

பெரிய புல்வெளி இருந்தது. அதில் பல வகையான ஜீவராசிகள் எப்படி வாழ்ந்து வருகின்றன என்பதைக் காணப் பெரிதும் ஆவல் கொண்டேன். ஒரே ஓட்டமாக ஓடினேன். அங்கே எறும்புகள் சாரி சாரியாக ஊர்ந்து செல்வதைக் கண்டேன். அந்த இடம் முழுவதும் சைதன்ய மயமாக (கடவுள் சொரூபமாக) விளங்கியது.

அடுக்கடுக்காக அமைந்த இதழ்களையுடைய பல வகையான பூக்களைப் போல உயிர்களும் இப்படிப் பல வகையாக இருப்பதைக் கண்டேன். நீர்க் குமிழிகளைப் போல் பெரியவையும் சிறியவையுமான வடிவங்களில் ஜீவராசிகள் விளங்குவதைப் பார்த்தேன்.

*  *  *  *

குருதேவர் சென்று கட்டிலின் மீது அமர்ந்தார். ஜகன்மாதாவுடன் பேசத் துவங்கினார்.

**ஸ்ரீராமகிருஷ்ணர் :** போகட்டும். நான் தெரிந்துகொள்ள வேண்டும் என்று ஆசைப்பட்டதில்லை! தாயே! எனக்கு உனது பாதகமலங்களில் தூய பக்தி உண்டாகட்டும். (ம-வைப் பார்த்து) எல்லா ஆசைகளும் அகன்ற அளவில் இந்த நிலை உண்டாகும்!

(அன்னை பராசக்தியிடம்) அம்மா! நான் செய்து வந்த பூஜையை நிறுத்திவிட்டாய்! என்னிடம் எல்லா ஆசைகளும் அடியோடு அழிந்து போகாதவண்ணம் பார்த்துக்கொள், அம்மா! பரமஹம்சர் குழந்தையைப் போன்றவர் அல்லவா? குழந்தைக்குத் தாய் வேண்டுமே! எனவே நீதான் தாய், நான் உன் குழந்தை. அன்னையின்றிக் குழந்தை எப்படி வாழ முடியும்?

இனிமை ததும்பும் குரலில் கல்லும் கரையும் வண்ணம் குருதேவர் அன்னையுடன் பேசிக்கொண்டிருந்தார்: "வெறும் அத்வைத ஞானமா? அதன்மீது காறி உமிழ்வேன். 'நான்' என்ற எண்ணத்தை என்னிடம் நீ எவ்வளவு நாட்கள் வைத்திருக்கிறாயோ அவ்வளவு நாட்களும் 'நீ' இருக்கிறாய். பரமஹம்சர் ஒரு குழந்தை. குழந்தைக்கு அன்னை வேண்டாமா?"

*  *  *  *

தெய்வமே! என்னைத் தங்கள் கருவி ஆக்கிக்கொள்ளுங்கள். பிறர் என்னைச் சமாதானப்படுத்த வேண்டும் என்று எதிர்பார்க்காமல், நான் பிறரைச் சமாதானப்படுத்துவேனாக. பிறர் என்னைப் புரிந்து கொள்ள வேண்டும் என்று நினைக்காமல், நான் பிறரைப் புரிந்து கொள்ள முயல்வேனாக. பிறர் என்னை நேசிக்கட்டும் என்று காத்திராமல், நான் அவர்களை நேசிப்பேனாக.

—புனித பிரான்ஸிஸ்

### ஆத்மஞானம்

ஆத்மஞானம் மரணம் என்ற பெரிய துன்பத்தைத்தான் சமாதானப்படுத்தும் என்பதில்லை. சிறு சிறு துன்பத்தைக்கூட அது சமாதானப்படுத்தும். ஜடபரதரைப் பல்லக்குத் தூக்கும்படி செய்தான் ரகூகணன். அதனால் வரும் சிரமமோ அவமானமோ உடலுக்கே தவிர ஆத்மாவிற்கு அல்ல என்று ஜடபரதர் உணர்ந்தார் அல்லவா?

—கிருஷ்ணப்ரேமி



# இந்தியாவின் இன்றைய நிலை

ஸ்ரீமத் சுவாமி வீரேச்வரானந்தஜி மகராஜ்

புருலியாவில் 'ராமகிருஷ்ண மிஷன் வித்யாபீடம்' என்ற ஒரு பெரும் கல்வி நிறுவனம் செயற்பட்டு வருகிறது. அதன் வெள்ளி விழாவில், ஸ்ரீராமகிருஷ்ண மடம் - சங்கம் ஆகியவற்றின் தலைவர் நிகழ்த்திய உரை இது.

▭▭▭▭▭▭

அன்பார்ந்த மாணவர்களே!

இந்த ஸ்தாபனத்தின் வெள்ளி விழா நிகழ்ச்சிகள் இன்று துவங்குகின்றன. இரண்டாவதாக, இங்குள்ள கோயிலில் சலவைக் கல்லால் ஆன பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் திருவுருவம் இன்று பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது.

தற்காலத்தில் நம்மைச் சுற்றி எங்கும் இருள் சூழ்ந்திருப்பதைக் காண்கிறோம்.

சமுதாயத்தின் எந்தப் பகுதியை நோக்கினாலும் அங்கு வாய்மைக்கு இடமில்லை. சமுதாயம் முழுவதையுமே கறுப்புச் சந்தை என்னும் கொடிய நோய் பற்றி, கறுப்புப் பணத்தால் நிறைத்து விட்டதோ என்று எண்ணத் தோன்றுகிறது.

இந்நிலைக்குக் காரணம் என்ன? இந்தக் கேள்விக்குப் பதிலாக, சுவாமிஜியின் (விவேகானந்தரின்) வாழ்க்கையிலிருந்து ஒரு நிகழ்ச்சியைச் சொல்ல விரும்புகிறேன்.

சுவாமிஜி அமெரிக்காவிலிருந்து இந்தியாவிற்குத் திரும்பி வந்தபொழுது, தமிழ்நாட்டில் சிலர், ''சுவாமிஜி! நீங்கள் ஏன் முதலில் அரசியலில் இறங்கக் கூடாது? இந்தியாவிற்கு விடுதலை வாங்கிக் கொடுத்த பின்பு மதத் தொண்டு போன்றவற்றில் ஈடுபடலாம் அல்லவா?'' என்று கேட்டனர்.

''நாளைக்கே வேண்டுமானாலும் உங்களுக்கு என்னால் சுதந்திரம் வாங்கித் தர முடியும். ஆனால், உங்களால் அதைக் காப்பாற்றிக்கொள்ள முடியுமா? சுதந்திரத்தைக் காக்கும் சக்தியும் திறமையும் படைத்த உண்மையான மனிதர்கள் எத்தனை பேர் இருக்கிறார்கள்? முதலில், மனிதன் என்ற வார்த்தையின் பொருளுக்கு இலக்கியமாக அமையும் உண்மை மனிதர்களை உருவாக்குங்கள். பிறகு சுதந்திரத்தைப்பற்றிச் சிந்தியுங்கள்'' என்று சுவாமிஜி பதில் அளித்தார்.

அவர் கூறியது நூற்றுக்கு நூறு உண்மை என்பதை இன்று நாம் கண்கூடாகப் பார்க்கிறோம்.

நம் நாடு இன்று படுமோசமான நிலையில் இருப்பதற்குக் காரணம், பண்பும் வாய்மையும் நிறைந்த மக்கள் இல்லாமையே என்று கூறவும் வேண்டுமோ! பண்டைய இந்தியாவில் கணக்கற்ற பெருந்தகையாளர்களும் துறவிகளும் வாழ்ந்தனர். சிறந்த பேரரசர்கள் பலர் இருந்தனர். அவ்வாறு இருந்தும், இன்று நாம் வருந்தத்தக்க கடைநிலையில் இருக்கிறோம். ஏன்? நம்மிடம் பெரும் தவறு ஏதோ உள்ளது என்றுதான் நான் பதில் சொல்வேன்.

இன்று நமக்கு அளிக்கப்படும் கல்வியறிவு, ஒருவனைப் பண்பும் வாய்மையும் உள்ள மனிதனாக உருவாக்கப் பயன்படுவதில்லை.

''மனிதன் திராக்ஷைப் பழங்களையும் அத்திப் பழங்களையும் முட்செடிகளிலிருந்தும் புதர்களிலிருந்துமா சேகரிக்

கிறுன்?'' என்று பைபிளில் ஒரு கருத்து உண்டு. முட்செடிகள்லிருந்து திராக்ஷைப் பழங்களேயும், காட்டுப் பூச்செடிகளி லிருந்து அத்திப் பழங்களையும் ஒருவன் பெறுவது என்பது எவ்வாறு சாத்திய மாகும்!

நம் சிறுவர் சிறுமியருக்கு நாம் எத் தகைய கல்வியறிவூட்டுகிறேமோ, அதற் கேற்றவாறுதான் அவர்களது மன வளர்ச்சியும் இருக்கும். பெரியவர்க ளாகும்போது அவர்களுடைய (பகுத் தறியும் தன்மையும்) லட்சியமும் நாம் ஊட்டும் கல்வியின் தரத்திற்கு ஏற்பவே அமையும்.

நமக்கென்று ஆங்கிலேயர் ஏற்படுத் திய தற்போதைய கல்வித் திட்டத்தை மாற்றுமல் அப்படியே விட்டுவிடுவோ மானல், நிலைமை சீர்திருந்த வழியே இல்லை.

ஒரு முறை, ''நம் கல்வித் திட்டம் எப்படி இருக்க வேண்டும்?'' என்ற கேள்வியை, சுவாமிஜி தாமே எழுப்பிப் பதிலும் கூறியுள்ளார்: ''கல்வித் திட்டத் தின் முக்கியமான அம்சம் பண்பை வளர்ப்பதே. 'மாணவர்கள் பண்புள்ள வர்களாக வளர்கிறுர்களா?' என்பதி லேயே நாம் கண்ணும் கருத்துமாக இருக்க வேண்டும். பண்டைய நாட்களில் கற்பிக்கப்பட்ட எல்லாவிதமான அறிவும் புகட்டப்பட வேண்டும். அத்துடன் நில்லாமல், ஆங்கிலம் படிப்பதும் மிகவும் முக்கியம். ஏனெனில், ஆங்கில மொழி யின் மூலம்தான் நாம் உலகத்தின் பல பாகத்திலுள்ளவர்களோடு தொடர்பு கொள்ள இயலும். நவீன விஞ்ஞானமும், தொழில் நுட்ப அறிவும்கூட அவசியம் தான். தொழில்நுட்ப அறிவின் மூலம் பலவிதமான தொழில் வாய்ப்புக்களை நாம் ஏற்படுத்த வேண்டும். தொழில் வளர்ச்சியின் பயனுக ஏழை எளியவர்கள் தங்கள் அன்றுடத் தேவைகளுக்கு ஏற்ற வருவாய் பெறுவதற்கான வழி வகுக்க வேண்டும்.''

ஆனல் இவற்றிற்கெல்லாம் அடிப் படை, பண்பை வளர்ப்பதே. பண்பை வளர்ப்பது என்பது வெறும் விளையாட்டு அல்ல. சொற்பொழிவுகளினுலோ, பாராளுமன்றங்கள் தீட்டும் சட்டதிட் டங்களினுலோ இந்தக் காரியத்தைச் சாதிக்க முடியாது.

பண்பு வளர வேண்டுமானல் மதம் அதாவது தர்மம் அவசியம். நம் பண்டைய கல்வித் திட்டத்தில் அபரா வித்யா, பரா வித்யா என்ற இரண்டு பிரிவுகள் இருந்தன. ஆயிரமாயிரம் வருடங்களாக இந்தியாவின் அதி உன்னத லட்சியமாக விளங்கும் முக்தி (மோக்ஷம்), தர்மம் (மதம்) ஆகியவை பரா வித்யை யின் மூலம் போதிக்கப்பட்டன. மனிதப் பிறவியின் லட்சியமே முக்தி என்பதனுல், கல்வி கற்பிக்கப்படும்போதும் அந்த லட்சியத்தை நினைவில் கொள்ள வேண்டியது அவசியம்.

பண்டைக் காலத்தில் சிறுவர் சிறுமிய ருக்குப் பலவிதமான அறிவு புகட்டப் பட்டது. அதில் மதம் அல்லது தர்ம போதனைகளும் இடம் பெற்றன. அதா வது நற்பண்புகளை வாழ்வில் கடைப் பிடிக்கும் முறை பயிற்றுவிக்கப்பட்டது. 'கற்க கசடறக் கற்பவை; கற்றபின் நிற்க அதற்குத் தக' என்னும் முது மொழிக்கேற்ப, மாணவர்கள் வாழ முற்பட்டபோது பண்பு தானுகவே வளர்ந்தது.


சுவாமி வீரேச்வரானந்தஜி மகராஜ்



## சந்தனம் சாத்தும் பலன்

சிவபெருமானுக்கு மெய்யன்போடு அகில், கர்ப்பூரம், குங்குமப்பூ முதலிய பொருள்கள் கலந்த சந்தனக் குழம்பைச் சாத்துகின்றவர்கள் வைராக்கியம் உடையவர்களாய்ச் சிவபுரத்தை அடைவார்கள். இது 'திருவருள் சக்தி பதிதல்' என்னும் பாவனையாகும்.

விதித்த கர்மங்களைச் செய்துகொண்டு, பயனில் சிந்தையைத் துறந்து, ஆத்மலாபத்தில் சந்தோஷத்தையடைந்து வாழ்பவன் முக்தி எய்துகிறான் என்பதில் சந்தேகமில்லை.

—தேவீ பாகவதம்



உள்ளத்தை ஒடுக்குவதைக்காட்டிலும் உலகத்தை ஒடுக்கி வெல்வது எளியது.

—கிருஷ்ணானந்தர்

தற்போது நம் கல்வித் திட்டத்தில் இந்தச் சிறப்பு அம்சம் மறைந்தே போய் விட்டது. தர்மத்தை ஒட்டிய நெறி முறைகளைப் போதிக்க நாம் தவறிவிட்ட தனால் விளைந்த பயனை இன்று அனுப விக்கிறோம்.

நாட்டின் குறிக்கோள்களோடும் பண் பாட்டோடும் எவ்விதத்திலும் தொடர் பற்ற கல்வி, உண்மையில் கல்வியே அல்ல. சிறிது எழுதவும் படிக்கவும் தெரிந்துகொள்வது மட்டுமா கல்வி? கல்விக்கு வேறு இலக்கணம் இல்லையா?

அறிவை வளர்க்கும் பொருட்டுப் பள்ளிக்கூடங்களுக்கு வரும் சிறுவர் சிறுமியருக்கு, நாட்டின் லட்சியத்தை மனதில் கொண்டு அறிவூட்டி, பண்புள்ள மனிதர்களாக்கி, உண்மையான இந்தியக் குடிமக்களாக உருவாக்குவதே கல்வி. இப்படிச் செய்யத் தவறும் கல்வியினால் என்ன பிரயோசனம்?

முறையான கல்வியளிக்கத் தவறி யதன் பலனாகவே நாம் இவ்வளவு தாழ்ந்த நிலையில் இப்போது இருந்து கொண்டிருக்கிறோம்.

பள்ளிக்கூடங்களிலும் கல்லூரிகளிலும் நடைமுறையிலுள்ள பாடத் திட்டங் களில் மேற்கூறியவை இடம்பெறவில்லை. இன்று நம் பள்ளிகளிலும் கல்லூரி களிலும் பலவிதமான இக்கட்டான நிலைகள் அவ்வப்போது தோன்றுகின்றன.

சுவாமிஜி எடுத்துரைத்த முறையை முழுவதுமாகக் கடைப்பிடித்துக் கல்வி பயிற்றுவிக்க இன்று ராமகிருஷ்ண சங்கத் தினால் இயலவில்லை என்றாலும், எங்கெல் லாம் அந்த முறையைக் கடைப்பிடிக்க முடிகிறதோ அங்கெல்லாம் அவ்வாறு செய்கிறோம். இதற்கெனவே மாணவர் இல்லங்களும், பண்டைய குருகுல முறை யைப் பின்பற்றிப் பள்ளிக்கூடங்களும் நடத்தி வருகிறோம். இந்த நிறுவனங் களில் மாணவர் அனைவரும் ஒன்றாக வாழ்கின்றனர். ஆசிரியர்களும் மாண வர்களுக்கு வெகு அருகிலேயே வாழ் வதனால் பள்ளிப் பாடத் திட்டங்களுக்கு அப்பாற்பட்ட பல அரிய விஷயங்களை அவர்களுக்குக் கற்றுத்தர முடிகிறது.

பள்ளியிலேயே மாணவர்கள் தங்கிப் படிப்பது போன்ற ஓர் அமைப்பைப் பல இடங்களில் இதற்கெனவே ஏற்படுத்தியுள்ளோம். இத்தகைய பள்ளிக்கூடத்தை இங்கு அமைத்ததனால்தான் இன்று ஸ்ரீகுருதேவரின் சலவைக்கல் விக்கிரகத்தைப் பிரதிஷ்டை செய்ய முடிந்தது. ஒரு கோயில் கட்ட முடிந்தது.

'இந்தக் கோயிலுக்கும் கல்விக்கும் என்ன சம்பந்தம்?' என்ற கேள்வி எழக் கூடும். மாணவர்களின் வாழ்வில் அழியாத சில நினைவுகளைப் பதிய வைக்கும் சக்தி இந்தக் கோயிலுக்கு உண்டு என்பதே கோயிலுக்கும் பள்ளிக்கும் உள்ள தொடர்பாகும்.

ஸ்ரீகுருதேவர், அன்னையார், சுவாமிஜி ஆகியோரின் வாழ்க்கையையும் உபதேசங்களையும் தினமும் கேட்டும் சிந்தித்தும் இருப்பதனால், அவர்கள் காட்டிய லட்சிய நெறி, மாணவர்கள் மனதில் பசுமரத்தாணி போல் பதிய வாய்ப்பு உண்டு. இதனால்தான் கோயில் மிகவும் அவசியம் என்று கூறுகிறேன்.

மற்றப் பள்ளிகளில் இம்மாதிரிச் செய்வது சாத்தியமில்லை. பாடத்திட்டத்தில் மதபோதனைக்கு நேரடியாக இடமில்லாதபோதும், இம்மாதிரிப் பள்ளிகளில் மாணவர்களுக்குத் தர்மத்தின் அடிப்படைத் தத்துவங்களைக் கற்றுத் தர முடிகிறது.

மற்றப் பள்ளிகளில் மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் குறிப்பிடும்படியான தொடர்பு இருப்பதில்லை. மாணவர்கள் குறிப்பிட்ட சமயத்தில் பள்ளிக்கு வருவார்கள். சில மணிநேரம் படித்து விட்டுச் சென்றுவிடுவார்கள். அதற்குப் பின்பு ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்கும் எவ்விதத் தொடர்பும் இருப்பதில்லை. பண்டைக் காலத்தில் இந்த வழக்கம் இருக்கவில்லை. ஆசிரியருக்கும் மாணவனுக்கும் இடையே தந்தைக்கும் மகனுக்கும் உள்ள நெருங்கிய உறவு இருந்து வந்தது. ஒருவரை ஒருவர் மதித்தனர். இக்காலத்தில் அத்தகைய ஒரு மதிப்பு இல்லை. மாறாக 'கேரோவ்' போன்ற பல நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன.

### ஒரே தத்துவம்

சிவன் என்றைக்கு உண்டோ, அன்றே முருகப்பெருமானும் உண்டு. சிவன் வேறு, முருகன் வேறல்ல; உமாதேவியார், விநாயகப்பெருமான், கந்தவேள் இவர்கள் எல்லாரும் பரமேசுவரனின் பலவேறு அம்சங்களாவர்; எப்படி என்றால், சிவபெருமான் நெருப்பெனில், பராசக்தி நெருப்பின் சூடு; கணபதி நெருப்பின் சிவப்பு நிறம்; முருகன் நெருப்பிலுள்ள ஒளியாவான்,

இன்னும் காணின், பரமேசுவரன் மலரெனில், உமாதேவி மலரின் உருவம்; விநாயகர் மலரின் வண்ணம்; முருகப்பெருமான் அதன் மணமாவார்.

—திருமுருக கிருபானந்த வாரியார்



இந்தச் சூழ்நிலையில் மதிப்பும் மரியாதையும் எவ்விதம் வளர முடியும்? மரியாதை வளர்வதற்கு அடிப்படையாகத் தேவைப்படும் குணமே இல்லாமலிருக்கிறது. நமது கல்வி ஸ்தாபனம் குருகுல முறைப்படி நடப்பதனால் மாணவர்கள், ஆசிரியர்கள், துறவிகள் எல்லோருமே இங்கே சேர்ந்து வாழ்கிறார்கள்.

இதனால் அவர்களுக்கிடையே பரஸ்பரம் அன்பும் நம்பிக்கையும் வளர்கின்றன. அதனால் நல்ல பலனும் கிடைக்கிறது. [அடுத்த இதழில் முடியும்]

# சிவனும் விஷ்ணுவும் ஒருவரே

வி. தியாகராஜன்

நாட்டிலே எத்தனையோ வேற்றுமைகள். அவற்றில் ஒன்று-சிவன் பெரியவரா, திருமால் பெரியவரா என்பது.

எந்தத் தெய்வத்தை வணங்கினாலும் அது சிவபெருமானைச் சேரும் என்பது சைவத்தின் வாக்கு.

ஆகாயத்திலிருந்து விழும் தண்ணீர் எப்படிக் கடலை வந்து அடைகிறதோ அது போல் எந்தத் தெய்வத்தை வணங்கினாலும் அது திருமாலையே அடையும் என்பது ஒரு வடமொழி சுலோகத்தின் கருத்து.

இறைவன் ஒருவனே. அவனுக்கு எல்லாப் பெயர்களும் எல்லாக் கோலங்களும் பொருந்தும் என்பர் ஆன்றோர். பொய்கையாழ்வார்—

**அரன் நாரணன் நாமம், ஆன் விடை புள் ஊர்தி;**
**உரை நூல்மறை; உறையுங் கோயில்—வரை நீர்**
**கருமம் அழிப்பு அளிப்பு, கை மழுவே நேமி;**
**உருவம் எரி கார்மேனி ஒன்று.**



இருவர் இரு உருவங்களோடு இருந்தாலும் சங்கரநாராயணன் என்ற பெயரால் ஒருவன் அங்கத்து ஒருவன் என்றுமுளன் என்கிறார்.

திருமலை என வணங்கப்பெறும் திருப்பதியில் திருமாலையும் சிவபெருமானையும் ஒரே உருவாகக் கண்டு, 'திருமலைமேல் எந்தைக்கு இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து' என்பது பேயாழ்வார் காண்பிக்கும் காட்சி.

## தென்திசை நோக்கிய தெய்வங்கள்

தில்லையிலே நடராஜமூர்த்தி தெற்குத் திசை நோக்கிக் காலைத் தூக்கி ஆடுகிறார். அதற்கு, ''தென்திசை வாழும் யமனே! என் அடியார்களை நீ தொட நினைத்தால் உன்னை எட்டி உதைத்து, யமன் என்ற பெயரே இல்லாது அழித்துவிடுவேன் எனக் காட்டுதற்கே'' என்று குமரகுருபரசுவாமிகள் பொருள் கூறுகிறார்.

ஸ்ரீரங்கத்தில் மேற்கே தலைவைத்துக் கிழக்கே திருவடியை நீட்டிக்கொண்டு, வடக்கே தமது பின்புறத்தைக் காட்டித் தென்திசையை நோக்கித் திருமால் துயிலுவதற்குக் காரணம், என்றும் அழியாத வரம் பெற்ற இலங்கைவேந்தனை விபீஷணனை ஆட்கொண்டு அருள் நோக்கமளிப்பதாகும் என்கிறார் தொண்டரடிப்பொடியாழ்வார்.

## கோவிந்தராசர் எதிரில் நடராஜர் ஏன் ஆடுகிறார்?

இறைவனை திருமால் வாமனாவதாரம் எடுத்து 'ஈரடியால் மூவுலகையும் அளந்தார். உலகத்தை அளந்த திருவடிகளில் பிரம்மதேவன் தன் கமண்டலநீர் கொண்டு கழுவ, அதுவே கங்கையாகப் பெருகியதாம். பெருகி வந்த கங்கையைப் பகீரதனுக்காகச் சிவபெருமான் தம் திருமுடியில் ஏற்றார்

அன்றே! திருமாலின் திருவடி தீர்த்தம் தமது முடியில் விழுந்து தங்கிய ஆனந்தத்தால் நடராஜா நடனமாடிக்கொண்டிருக்கிறர் என்பர் திவ்யகவி பிள்ளைப் பெருமாளையங்கார்.

அதுமட்டுமன்று; 'கோவிந்தராசர் எதிரில் தமது காலைத் தூக்கி நடராசர் ஆடலாமா? இடது காலைத்தான் தூக்கி ஆடுகிறர். இடது பக்கம் அம்மை இருக்கிருள். எனவே திருமாலின் தங்கையான அம்மையின் கால்தான் தூக்கியாடுகிறது. சிவபெருமான் மீது குற்றமில்லை. அம்மை நீலமேனி மால் திருத்தங்கை அல்லவா?' என்கிருர் குமரகுருபரசுவாமிகள்.

திருமாலும் சக்தியும் ஒன்றே என்பது பெரியோர் கொள்கை. 'பிரிவிலா அமரர் கூடி எம்பிரான் என்று ஏத்தும் அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாறனுர்க்கே' என்பது அப்பர் தேவாரம்.

**நடராஜர் எதிரில் கோவிந்தராசர் ஏன் பள்ளிகொண்டார் ?**

சிதம்பரத்தில் பதஞ்சலி முனிவராக நின்றுகொண்டிருப்பவர் ஆதிசேஷன். மற்றொரு பக்தரான வியாக்ரபாதர் என்பவருக்கு உபமன்யு என்ற ஒரு மகன். வியாக்ரபாதரின் மனைவி வசிஷ்ட மகரிஷியின் தங்கை. உபமன்யு வசிஷ்டரின் ஆச்ரமத்தில் பிறந்தவர். காமதேனுவின் பாலைக் கொடுத்து வசிஷ்டர் தம் மருமகனை வளர்த்தார். உபமன்யு தம் தாயுடன் சிதம்பரம் வந்தபின் பாலருந்த மறுத்தார். காமதேனுவின் பாலைச் சாப்பிட்ட குழந்தை பசும்பால் முதலான





எதையும் ஏற்க மறுத்தது. மகன் பசியால் வருந்துவது கண்டு நொந்த வியாக்ரபாதர் நடராஜப் பெருமானை வேண்ட, அவர் பாற்கடலை வரவழைத்துக் குழந்தையின் வாயில் ஊற்றிப் பசிநீங்கச் செய்தார். இதை, ''பாலுக்குப் பாலகன் வேண்டி அழுதிடப் பாற்கடல் ஈந்த பிரான்'' எனக் கூறும் திருமுறை.

இந்தச் சம்பவங்களைச் சேர்த்து, ''திருமால் படுக்கும் படுக்கையான ஆதிசேஷனை உனது பக்தனுகப் பதஞ்சலி என்ற பெயருடன் பக்கத்தில் வைத்துக் கொண்டாய். அவன் படுத்து உறங்கும் பாற்கடலைக் குழந்தையான உபமன்யுவின் பசி நீக்க உதவினுய். அதனுல் திருமால் தமது படுக்கும் பாய், படுக்கும் இடம் ஆகிய இரண்டையும் இழந்து, வேறு வழியின்றி உன் வாசலிலேயே படுத்துள்ளார். வீடு கொடுக்கும் தெய்வமான நீ வீட்டைப் பறித்துக் கொள்வது நேர்மையன்று'' என்று நகைச்சுவையாகக் கூறினுர் குமரகுருபர சுவாமிகள்.

சிவபெருமானும் திருமாலும் ஒருவரே என்பதற்கு இன்னும் ஒரு சான்று உண்டு. மதுரையில் பிட்டுக்கு மண் சுமக்கச் சிவபெருமான் கூலியாளாய் வந்த காலத்துப் பாண்டியன் பொற்பிரம்பு கொண்டு அடிக்க, உலகம் முழுவதும் எல்லார் உடலிலும் அந்த அடி பட்டது என்பது பிரசித்தமான வரலாறு.

இதே கருத்தை, வெண்ணெய் திருடிய கண்ணனைக் கோபிகை ஒருத்தி கோபித்து அடித்த காலத்தில் உலகத்தில் எல்லோருடைய உடலிலும் அடி பட்டது என்கிறது அஷ்டப் பிரபந்தம்.

ஒரு சமயம் அருச்சுனன் சிவபூசை செய்ய விரும்பியபோது கண்ணன் தன் திருவடிகளிலேயே சிவார்ச்சனை செய்யுமாறு கூற, அருச்சுனன் அவ்வாறே செய்தான். பின்பு அருச்சுனன் தனது பூசையறையில் சென்று கண்டபோது அதே மலர்கள் சிவலிங்கத்தின் திருவுருவின் மீதே இருந்ததைக் கண்டு வியப்படைந்தான் என்று கூறுவர்.

இந்தத் தெய்வங்களை வணங்கும் அடியார்களின் வாக்குகள்கூட ஒத்து வருகின்றன. ''உன் திருவடிகளைத் தரிசித்த கண்களால் மற்ற எதையும் ஏன் பார்க்க வேண்டும்? திருவடியைக் கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே!'' என்றார் சிவனடியார்.

இதே நிலையில் திருமாலைப் பார்த்து, ''என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே'' என்றார் திருப்பாணாழ்வார்.

''இறைவனே! உன் அடியவனைப்போல வேடமிட்டுக் காலம் போக்கினேன். எனக்குள்ளே நீ இருந்து நான் நினைப்பதையெல்லாம் அறிவது கண்டு விலா எலும்பு முறியும்படி சிரித்திட்டேன். வெள்கினேன் வெள்கி யானும் விலவறச் சிரித்திட்டேனே'' என்று அப்பரும், ''வெள்கிப்போய் என்னுள்ளே யான் விலவறச் சிரித்திட்டேனே'' என்று தொண்டரடிப்பொடியாழ்வாரும் கூறினார்கள். எனவே, அரியும் அரனும் ஒருவரே என்பதை நாம் அறிகிறோம். ''சிவபெருமான் தந்தை என்றும், திருமால் தாய் என்றும் எண்ணி வாழ வேண்டும். நற்கதி பெற இதுவே வழி'' என்று கும்பகோணத்தில் ஒரு சமயம் மகாவித்வான் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளை பாடினார்.

சைவ வைணவ பேதமில்லாமல் இரண்டும் தெய்வங்களையும் வணங்கி வாழ்வோமாக.





# நன்மை செய்

திருமுருக கிருபானந்தவாரியார்

கூடவுதல் என்றால் செலுத்துதல் என்று பொருள். உலகங்களையும் உயிர்களாகிய நம்மையும் செலுத்துகின்றபடியால் இறைவனுக்குக் கடவுள் என்ற பேர் ஏற்பட்டது. நம்மையெல்லாம் செலுத்துகின்றவர் கடவுள். ஒரு வண்டியைச் செலுத்துகின்றவன் வண்டிக்குள் இருந்து செலுத்துவது போல் கடவுள் உயிருக்கு உயிராக இருந்து செலுத்துகின்றார்.

கண்ணால் காணமாட்டாமையால் கடவுள் இல்லை என்று கூறக் கூடாது. இந்த உடம்பிலே உள்ள உயிரை நாம் எப்போதாவது கண்ணால் கண்டதுண்டா? காணமாட்டாமையால் நாங்கள் உயிரில்லாதவர் என்று கூறினால் உலகம் சிரிக்குமல்லவா? உடம்புக்குள் உயிரும் உயிருக்குள் இறையும் உறைகின்றன.

ஆகவே கடவுள் உயிர்தோறும் உறைகின்றார். ஒன்றாகி உடனாகி வேறாகியிருக்கின்றார். எவ்வுயிரும் பராபரன் சந்நிதியாகும். ஆதலால் எல்லா உயிர்கட்கும் நாம் நன்மையே செய்ய வேண்டும். உயிர்களுக்குச் செய்யும் நன்மையும் கடவுள் வழிபாடாகும்.

உயிர்களுக்கு வருகின்ற இடர்களை முடிந்தவரை நீக்கியும், நன்மை புரிந்தும் மகிழ வேண்டும். அதுவே அறிவு படைத்ததன் பயனுமாகும்.

இனி, கடவுள் எங்கும் இருக்கின்றார் என்பதனையும் மறவாமல் கருத்தில் இருத்த வேண்டும்.

'பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணா னந்தமே' என்கின்றார் தாயுமானார். இந்த எண்ணம் இடையறாது உள்ளத்தில் நிலைபெற்றிருக்க வேண்டும். ஆண்டவன் நம் உள்ளத்தில் இருக்கின்றானாதலினாலும், நாம் செய்யும் தீமைகட்குத் தண்டனை தருவோன் அவனேயாதலினாலும், நாம் அவனையின்றிப் பிரிந்திருக்க முடியாமையாலும் நாம் தீமைகளை நினையாமலும் சொல்லாமலும் செய்யாமலும் இருக்க வேண்டும். ஜீவசாட்சியாக இருந்து இறைவன் நம் எண்ணங்களையெல்லாம் அறிகின்றான். நாம் பேசும் பேச்சுக்களையெல்லாம் கேட்கின்றான். நாம் செய்யும் ஒவ்வொரு செயலையும் காண்கின்றான். ஆதலினால் நாம் நல்லனவே நினைந்து, நல்லனவே பேசி, நல்லனவே செய்ய வேண்டும்.

இனி, நாம் பிறர்க்குத் தீங்கு செய்வோமானால் அது நமக்கேதான் செய்கிறோம் என்பதை மறந்து விடக்கூடாது. பிறர்க்குச் செய்யும் நன்மையும் தீமையும் நமக்குத் திரும்ப வருகின்றன.

வினை அறிவில்லாத சடம் ஆதலின், தானே வந்து நம்மைச் சாராது. நாமும் சிற்றறிவுடையோமாதலின் நாமும் செய்த வினையை அறிந்து அடைய வல்லோமல்லோம். ஆதலின் முற்றறிவும் பேராற்றலும் படைத்த பரம்பொருளாகிய கடவுள் அவரவர் செய்த வினைகளை அவரவர்கட்குக் காலம் இடம் அறிந்து ஊட்டுகிறார்.

இனி, நாம் செய்த நல்வினை தீவினை செய்த அளவே வரா. ஒன்று ஆயிரமாகப் பெருகி வரும். வயலில் இட்ட விதை ஒன்று பலவாக வருவது போல், வினைகளும் பன்மடங்கு வளர்ந்து வரும்.

ஒரு முனிவருடைய ஆசிரமத்தில் வேறு ஒரு முனிவர் உணவு உண்டுகொண்டிருந்தார். அந்த முனிவருடைய சின்னஞ்சிறு மகன் விளையாட்டாக முனிவருடைய உணவில் ஒரு சிறு கல்லை எறிந்தான். முனிவர் அதனை அறியாமல் உணவு அருந்தினர்.

பின்னர் முனிவர்புதல்வர் சகல நூல்களையும் கற்று அரிய பெரிய தவம்செய்து மாதவசிகாமணியாக ஆனர். இவர் ஒரு முறை தற்செயலாக அறக் கடவுளுடைய உலகம் சென்ருர். அங்கு ஒரு குன்றம் இருக்கக் கண்டார். ''இது என்ன?'' என்று அறக் கடவுளை வினவினர். அதற்கு அறக்கடவுள், ''இது நீர் சிறுபிள்ளையாக இருந்தபோது ஒரு முனிவர் உணவில் எறிந்த கல்; இங்கு வளர்ந்துகொண்டேயிருக்கிறது. இதை நீர் இங்கே வந்து உண்ணுதல் வேண்டும்'' என்ருர்.

அதைக் கேட்ட முனிவர் நடுங்கிப் பூவுலகம் வந்து அந்தக் குன்றுக்குச் சமமான ஒரு குன்றைப் பிளந்து, சிறு துண்டுகளாக்கி அவற்றை இடித்துக் கரைத்து நாள்தோறும் குடித்து முடித்தார். நரகவுலகில் இருந்த குன்று கரைந்துவிட்டது. சிலையையே உணவாகக் கொண்டதனுல் அவர் சிலாதனர் எனப்பட்டார். அவர் செய்த புத்ர காமேஷ்டி யாகத்தில் அவதரித்தவர் திருநந்திதேவர்.

ஆகவே நாம் சிறு பாவங்களையும் செய்யக்கூடாது. எல்லா உயிர்களிலும் இறைவன் இருக்கிருன் என்று எண்ணி, உயிர்களுக்கு நன்மையே செய்து நலம்பெற வேண்டும். ★



# இறைவன் ஊரும் ஏறு

இறைவனுடைய வாகனமாகிய இடபத்தின் வலிமையை எண்ணிப் பார்க்கிறார் காரைக்கால் அம்மையார். அது தர்ம ரிஷபம். என்றாலும் அதற்குக் கோபம் வந்துவிட்டால் அது நடக்கும் முறையே வேறு.

நமக்கு இன்பம் தருவதற்கும் துன்பம் தருவதற்கும் காரணமாக இருப்பது அறம். அதை அறக் கடவுள் என்றே சொல்வார்கள். பாவம் செய்பவர்களை அறம் புறக்கணிக்கும். நல்லவர்களுக்கு இனியதாக இருந்து நலம் செய்யும் அறக் கடவுள் தீயவர்களுக்கு இன்னாததாக நின்று ஒறுக்கும்.

என்பி லதனை வெயில் போலக் காயுமே
அன்பி லதனை அறம்

என்பது திருக்குறள். அறம் காய்வதும் உண்டு என்பது அதனால் தெரியவரும்.

அறத்தையே இறைவன் இடபமாகக் கொண்டிருக்கிறான். ஆதலின் அது தீயவர்களை நடுங்கச் செய்யும் ஆற்றலும் கொண்டது.

இறைவனை நோக்கி அந்த ஏற்றைப் பற்றிய வினாவை விடுக்கிறார் அம்மையார். 'பொன்னையொத்த திருமேனியை உடையாய்!' என்று விலாசம் இடுகிறார்.

பொன் ஒப்பாய்

''நின் வாகனமாகிய ஏறு எத்தகையது?'' என்று கேட்கிறார்.

அது சினத்துடன் இருந்தால் எப்படி இருக்கிறது? அப்போது அது நடந்தால் இந்தப் பூமியே அதிரும்; பூகம்பம் வந்தது போல நடுங்கும்.

நடக்கின் படி நடுங்கும்

அது கோபத்தோடு நோக்கினால் அதன் கண்களிலிருந்து அனல் கொப்புளிக்கும். அது கோபத்தோடு எந்தத் திசையில் தன் பார்வையைச் செலுத்துகிறதோ, அந்தத் திசையிலுள்ள பொருள்களெல்லாம், அந்தக் கண்கள் உமிழும் தீயால் வெந்து போய்விடும்.

நோக்கின் திசை வேம்.

அது தன் குரலை எழுப்பி இடி போல முழங்கினால் எல்லா உலகங்களிலும் இருப்பவர்கள் அஞ்சி, ''பிரளயகாலம் தான் வந்துவிட்டதோ? இடி விழப் போகிறதோ!'' என்று நடுங்குவார்கள்.

இப்படிச் செய்யும் இறைவனுடைய வாகனமாகிய ஏற்றுக்கு எதை உவமை சொல்லலாம்? மலைகளைத் தாக்கி இடிக்கும் சிங்கத்தைச் சொல்லலாமா?

அடுக்கல்
பொரும் ஏறோ?

மலைகளை மட்டுமா இந்த இடபம் தாக்குகிறது? அண்டங்களெல்லாம் கிடுகிடுக்கச் செய்கிறதே! இது உண்மையில் காளை மாடுதானோ?

ஆன் ஏறோ?

அல்லது பிரளயகாலத்தில் இடியும் மின்னலுமாகப் பிரசண்ட மழை பொழிகிறதே, அந்தக் காலத்தில் இடிக்கும் இடியோ?



கி.வா.ஜகந்நாதன்

உருமேறே?

'நின்னுடைய இடப வாகனத்துக்கு எதை உவமையாகச் சொல்வது? அதனேடு பழகும் உனக்குத்தானே அது தெரியும்? எந்த ஒன்றைச் சொன்னல் நல்ல பொருத்தமாக இருக்குமோ அந்த ஓர் உவமையாக எனக்குச் சொல்.'

நின் ஏறு
உருமேறே? ஒன்ரு உரை.

'சிங்கம் என்று சில சமயம் சொல்லத் தோன்றுகிறது. அது சாந்தமாக இருக்கும்போது ஆனேருகத் தோற்றமளிக்கிறது. இடிபோல முழங்கினல் இடியைப் போலக் காட்சியளிக்கிறது. இந்த மூன்றில் எது சரி? ஏதாவது ஒன்றுதான் சரியாக இருக்கும். அந்த ஒன்றை எனக்கு விடையாகச் சொல்' என்கிருர்.

நடக்கின் படிநடுங்கும்;
நோக்கின் திசைவேம்;
இடிக்கின் உலகு அனைத்தும்
ஏங்கும்;—அடுக்கல்
பொரும் ஏரே? ஆனேரே?
பொன்ஒப்பாய், நின் ஏறு
உருமேறே? ஒன்ரு உரை.

பொன்னையொத்த நிறமுடையவனே, நின்னுடைய வாகனமாகிய இடபம், நடந்தால் இந்த உலகமே நடுங்கும்; கோபத்தோடு பார்த்தால் திசைகளில் உள்ளவை வெந்து போகும்; இடி போல முழங்கினல் உலகிலுள்ள உயிர்கள் யாவும் அச்சத்தால் துன்பம் கொண்டு, என்ன ஆகுமோ என்ற ஏக்கத்தை அடையும்; ஆதலால் அது மலைகளோடு மோதி உடைக்கும் ஆண்சிங்கமோ? அல்லது ஆனேறுதானே? அல்லது இடிதானே? ஏதேனும் என் வினவுக்குரிய விடையை ஒன்ருகச் சொல்.

[படி-பூமி. வேம்-வேகும்; இடைக்குறை. திசை-திசையிலுள்ள பொருள்கள்; ஆகுபெயர். இடிக்கின்-இடிபோல முழங்கினல்; தன் கொம்பினல் இடித்தால் என்றும் பொருள் கொள்ளலாம். உலகு-உலகத்தில் உள்ள உயிர்கள். ஏங்கும்-என்ன ஆகுமோ என்று எண்ணி நையும். அடுக்கல்-மலை. மலையொடு பொருவதைச் சொன்னதால், ஏறு என்பது ஆண்சிங்

## செய்திகள்

☆ பேரணும்பட்டு, பாரதமாதா நர்சரிப் பள்ளியின் நான்காம் ஆண்டு விழா ஏப்ரல் 16-ஆம் நாள் கொண்டாடப் பெற்றது. சுவாமி குமாரானந்தர் ஆசியுரை வழங்கினர்.

☆ ராஜபாளையம், ஸ்ரீராமகிருஷ்ண சேவா சங்கம் சிறந்த முறையில் நடத்தி வரும் விவேகானந்த வித்யாலயாவின் புதிய கட்டிடத்திற்கு ஏப்ரல் 24-ஆம் தேதி வாஸ்து நடந்தேறியது.

☆ சென்னை, ராமகிருஷ்ண மடத்தின் சார்பாக மயிலாப்பூரில் இலவச மருத்துவமனை கடந்த 60 ஆண்டுகளாக நடத்தப்பட்டு வருகிறது.

மருத்துவமனையின் பணிகளை மேலும் விரிவுபடுத்தும்பொருட்டு இப்போதைய மருத்துவமனையின் மாடியில் குழந்தைப் பராமரிப்பு நிலையம் (Paediatric) புதிதாகக் கட்டப்படவேண்டும்.

இந்தப் புதிய கட்டிடத்தை, சென்னை, ரோட்டரி கிளப் தனது நன்கொடையாக ஒரு லட்சம் ரூபாய் செலவில் கட்டித்தர முன்வந்துள்ளது. புதிய கட்டிடம் கட்டுவதற்கு உரிய துவக்கவிழா ஏப்ரல் 24-ஆம் தேதி விவேகாகானந்த ஹாலில் நடைபெற்றது.

☆ உதகை, மௌண்ட் ப்லெஸண்ட் ரோடில் குள்ளா கவுடர் அவர்களால் நிறுவப்பெற்றுள்ள ஸ்ரீராமகிருஷ்ண பூஜா மந்திரத்தின் பத்தாவது ஆண்டு விழா மே 1-ஆம் தேதி நடைபெற்றது. சுவாமி ஏகாத்மானந்தர் உட்பட ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தின் துறவிகள் இந்த விழாவில் கலந்துகொண்டனர்.

கத்தைக் குறித்தது. ஆன் என்பது பசு மாட்டின் பொது; ஏறு, அவற்றின் ஆண். பொன் ஒப்பாய்-நிறத்தால் பொன்னை ஒப்பவனே; ''பொன் வரையே போல்வான்'' (8), ''மேனி, செம்பொன் அணி வரையே போலும்'' (39), ''ஆங்கவன்றன் பொன்னுருவில் (58) , ''பொன் விலங்கல் போலாம்'' (60), ''ஆம்பொன் உருவடிவில்'' (67), ''தன்போலும் பொற்குன்றும்'' (83) என்று பல இடங்களிலும் இதைச் சொல்வதைக் காண்க.

அடியவர்கள் தம் உள்ளத்தே பொன்னைப் போல் பொதிந்து வைத்தலால் 'பொன் ஒப்பாய்' என்றார் எனலும் ஆம். ஓகாரங்கள்: ஐயம். ஒன்று-ஒன்றாக; ஒரே விடையாக.

'பொன் ஒப்பாய், நின் ஏறு இத் தகையது. அது சிங்கமோ, ஆனேறோ, இடியோ? ஒன்றைச் சொல்' என்றார்.]

அற்புதத் திருவந்தாதியில் வரும் 100-ஆவது பாட்டு இது.






# மகாகவி பாரவி

எஸ். கனகலட்சுமி

'கிராதார்ஜுனீயம்' என்பது ஒரு மகாகாவியம். இதை இயற்றிய பாரவி என்பவர் மகாகவியாக விளங்கியவர்.

பாரவியின் மனைவியின் பெயர் ரசிகா. பாரவி திருமணமான புதிதில் தமது மாமனார் வீட்டில் மனைவியுடன் வாழ்ந்து வந்தார்.

சில நாட்களுக்குப் பிறகு பாரவிக்கும் மாமனாருக்கும் இடையில் கருத்து வேற்றுமை ஏற்பட்டது. அது காரணமாக, பாரவி தம் மனைவியோடு மாளவ தேசம் வந்து அங்கேயே வசிக்க ஆரம்பித்தார்.

வறுமையால் வாடிய நேரத்தில் பாரவியின் மனைவி ரசிகா தன் நகைகளை விற்று வாழ்க்கை நடத்த உதவினாள்.

ஒரு நாள் உணவிற்கே வழியில்லாமல் போயிற்று. பாரவி மிகுந்த தன்மானம் உடையவர். மேலும், அவர் பிறரைப் புகழ்ந்து பாடிப் பொருள் பெறுவதையும் விரும்பாதவர். எனவே அவர் அன்றைப்பொழுதைக் கழிக்க, தாம் அதுவரை இயற்றிய கிராதார்ஜுனீயம் என்ற காவியத்தின் மூன்று சுலோகங்களை ரசிகாவிடம் கொடுத்து அவற்றை விற்றுப் பொருள் பெற்று வரும்படி கூறினார்.

ரசிகா அந்த நாட்டு அரசனிடம் பாதி சுலோகத்தைக் கொடுத்தாள். அரசன் அந்த சுலோகத்தில் காணப்பட்ட வாக்கியத்தைப் படித்தான். அதில், "நன்றாக யோசித்து முடிவு செய்யாமல் ஒரு காரியமும் செய்யக் கூடாது. நன்றாக யோசித்த பிறகே எந்த ஒரு காரியத்தையும் செய்ய வேண்டும்" என்று குறிப்பிடப்பெற்றிருந்தது. இந்த நன்மொழி அரசனைப் பெரிதும் கவர்ந்தது. எனவே அவன் அந்த நன்மொழியை அரண்மனையின் எல்லாச் சுவர்களிலும் எழுதி மாட்டும்படி உத்தரவிட்டான்.

அரசனின் இந்தச் செயல் அமைச்சனுக்குப் பெரிதும் வியப்பை உண்டுபண்ணியது.

சில மாதங்கள் கடந்தன. அரசனுக்கு அடிவயிற்றில் ஒரு கட்டி உண்டாயிற்று. அது காரணமாக அரசன் பெரிதும் வருந்தினான்.

அரசனது கட்டியை அறுவைச் சிகிச்சையின் மூலம் நீக்க வேண்டும் என்று மருத்துவர்கள் முடிவு செய்தனர். அதற்காக வெளிநாட்டிலிருந்து சிறந்த வைத்தியர் ஒருவரை வரவழைத்தனர்.

இந்தச் சமயத்தில் அமைச்சனின் உள்ளத்தில் ஒரு தீய எண்ணம் உருவாயிற்று. அதாவது அரசனது நோயைப் புறக் காரணமாக வைத்துக் கொண்டு, அரசனைக் கொன்று ஆட்சியைக் கைப்பற்ற அவன் முடிவு செய்தான்.

ஆதலால் இது விஷயமாக அமைச்சன் வெளிநாட்டு வைத்தியரைத் தனிமையில் சந்தித்துக் கலந்து பேசினுன்.

"அரசனின் அறுவைச் சிகிச்சைக்குப் பயன்படுத்த வேண்டிய கத்தியை முன்னதாகப் பல முறை விஷத்தில் தோய்த்து வைத்துக்கொள். அந்தக் கத்தியைக் கொண்டு நீ அரசனுக்கு அறுவைச் சிகிச்சை செய்தால் அரசன் இறந்துபோவது நிச்சயம். மக்களும் அரசனின் மரணத்தைக் குறித்துச் சந்தேகப்படமாட்டார்கள். ஏனென்ருல், அரசன் கட்டியின் உபாதையினுலேயே இறந்து போனுன் என்று மக்கள் நம்பிவிடுவார்கள்" என்று மருத்துவனிடம் கூறிய அமைச்சன், அரசனைக் கொல்வதற்குக் கைக்கூலியாக அந்த வெளிநாட்டு மருத்துவனுக்குத் தங்க நாணயங்கள் நிரம்பிய நான்கு பைகளைக் கொடுத்தான்.

அயல்நாட்டு வைத்தியன் பண ஆசை காரணமாக அமைச்சனின் சூழ்ச்சிக்கு ஒப்புக்கொண்டான்.

மறுநாள் அரசனுக்கு அறுவைச் சிகிச்சை செய்வது என்று நாள் குறித்திருந்தனர்.

அதன்படியே அரசனிடம் சென்ற மருத்துவன் அரசனின் கட்டியை அறுத்துச் சிகிச்சை செய்வதற்கு வேண்டிய முன்னேற்பாடுகளைச் செய்தான். பின்பு கட்டியை அறுக்கும்பொருட்டு, விஷம் தோய்ந்த கத்தியைக் கையில் எடுத்தான்.

அவன் அரசனுக்கு அறுவைச் சிகிச்சை செய்ய ஆரம்பித்தபோது அரண்மனைச் சுவரில் பெரிதாக எழுதப்பட்டிருந்த நன்மொழி அவனது கவனத்தைத் திருப்பியது. அந்த வாக்கியத்தைப் படித்தது காரணமாக, 'அரசனது கட்டியை விஷம் தோய்ந்த கத்தியால் அறுவைச் சிகிச்சை செய்தால், மன்னன் இறந்தவுடன் அவனது உடல் நீலநிறம் பெற்றுவிடும். இதனுல் உண்மை வெளிப்பட்டு நானும் பெரும் தண்டனை அனுபவிக்க நேரிடும்' என்ற எண்ணம் அவனுக்குத் தோன்றியது.

உடனே பயந்த நிலையில் அவன் தான் முதலில் கையில் எடுத்த விஷக் கத்தியை மறைத்துவிட்டு, வேறு நல்ல கத்தியைச் சிகிச்சை செய்வதற்கு எடுத்துக்கொண்டான். அவனது தடுமாற்றத்தையும் செயலையும் அரண்மனை வைத்தியர் கவனித்துவிட்டார். ஆதலால் அவர் வெளிநாட்டிலிருந்து வந்த அந்த மருத்துவனிடம், "கத்தியை மாற்றியதற்கு என்ன காரணம்?" என்று விசாரித்தார். அவரது கேள்விக்கு வெளிநாட்டு மருத்துவனுல் பதில் சொல்ல முடியவில்லை. அவன் பதில் சொல்லாமல் தயங்கினுன்.

அரசவை மருத்துவர் பதில் சொல்லும்படி அயல்நாட்டு மருத்துவனை மீண்டும் வினவினர். அவரது கேள்விக்குக் கைக்கூலி பெற்றிருந்த மருத்துவனுல் எந்தவிதப் பதிலும் சொல்ல முடியவில்லை.

சந்தேகம் கொண்ட ராஜவைத்தியர் விஷக் கத்தியை எடுத்துப் பாலில் போட்டார். உடனே பால் கறுப்பாக மாறியது.



நடந்தவை அனைத்தையும் அரசன் கவனித்துக் கொண்டிருந்தான். பால் கறுப்பாக மாறியதும், வெளிநாட்டு மருத்துவன் விஷம் தோய்ந்த கத்தியுடன் வந்திருக்கிறான் என்ற உண்மை அரசனுக்குப் புரிந்துவிட்டது. ஆதலால் அவன் வெளிநாட்டு மருத்துவனை உடனே கைது செய்யும்படி கட்டளை பிறப்பித்தான்.

அரசன் கட்டளையிட்ட மாத்திரத்திலேயே பயந்துபோன அயல்நாட்டு மருத்துவன் உண்மையை ஒன்று விடாமல் அரசனிடம் கூறிவிட்டான். அத்துடன் அவன் அமைச்சன் கைகூலியாகத் தன்னிடம் கொடுத்த தங்க நாணயங்கள் அடங்கிய நான்கு பைகளையும் அரசன் முன்னால் வைத்துத் தன்னைக் காப்பாற்றும்படி கதறினான்.

விஷயம் தெரிய வந்ததும் மன்னன் தன் அமைச்சனையும் கைது செய்யும்படி உத்தரவிட்டான்.

இவ்விதம் பாரவி எழுதிய சுலோகத்திலிருந்த நன்மொழி அயல் நாட்டு மருத்துவனைத் தவறு செய்வதிலிருந்து பாதுகாத்தது.

இதற்குள் இரண்டு மூன்று தினங்களில் அரசனது கட்டி தானாகவே உடைந்துவிட்டது.

அரசன் தன் உயிரைக் காத்தது பாரவியின் பொன்மொழியே என்று மகிழ்ந்தான். அத்துடன் தனது நன்றியறிதலைத் தெரிவிக்கும் வகையில் அவன் மகாகவி பாரவிக்கு லட்சம் பொற்காசுகள் கொடுத்துப் பாராட்டினான்.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு பாரவியின் புகழ் எங்கும் பரவியது.




**1. ஞானக்குரல்**

சுவாமி விவேகானந்தரின் வாழ்வும் வாக்கும் அடங்கிய நூல். பக்கம் 83—விலை ரூ. 3.

தொகுத்தவர்: புத்தகப்பித்தன்

**2. சின்மயானந்தரின் சிறு கதைகள்**

சுவாமி சின்மயானந்தரின் ஆங்கில உரைகளிலிருந்து தொகுக்கப்பட்ட சிறு கதைகளின் தமிழாக்கம். எளிய இனிய மொழிபெயர்ப்பு. பக்கம் 276—விலை ரூ. 14–50

திரட்டும் தமிழும்: எஸ். லட்சுமி சுப்பிரமணியம்

**3. முக்தி அளிக்கும் முருகநாமம்**

வாரியார் அவர்களின் 10 கட்டுரைகளின் தொகுப்பு. பக்கம் 108 விலை ரூ. 5-50

ஆசிரியர்: திருமுருக கிருபானந்தவாரியார்

**4. இதோ தெய்வம்**

ஸ்ரீ காஞ்சி காமகோடிபீடம் ஸ்ரீசந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகளைத் தரிசித்த இருபது அன்பர்கள் எழுதிய அனுபவங்கள். பக்கம் 108விலை ரூ. 5-50

மேலே குறிப்பிட்ட நான்கு நூல்களையும் வெளியிட்டோர்: குமரிப் பதிப்பகம். 20, பெருமாள் தெற்கு வீதி, நாகப்பட்டினம்-611001.

**5. ஆன்மீக விளக்கு**

இந்த நூல் கீதா சந்தேசம், ஸநத்ஸுஜாதீயம் என்ற இரண்டு பகுதிகளைக் கொண்டுள்ளது. முதல் பகுதி பகவத்கீதையை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட 20 கடிதங்களின் தொகுப்பு. இரண்டாம் பகுதியில் மகாபாரதத்தில் ஸநத்ஸுஜாதர் என்ற பிரம்மஞானி திருதராஷ்டிரனுக்கு உபதேசித்த பிரம்மதத்துவம் குறித்த ஞான நூல் இடம் பெற்றுள்ளது. ஆதிசங்கரர் உரை எழுதியுள்ள இந்த நூலுக்குத் தமிழில் விளக்கம் தரப்பட்டிள்ளது. பக்கம் 191—விலை ரூ. 10

ஆசிரியர்: ஏ.வி. சுப்பிரமணியன்

கலைஞன் பதிப்பகம். 54, பாண்டி பஜார், சென்னை—600 017.

**6. ஆத்திகமும் நாத்திகமும்**

வாழ்க்கையின் துவக்கம், வாழ்க்கையின் இயக்கம், வாழ்வும் மரணமும், வாழ்க்கையின் முடிவு ஆகிய தலைப்புகளில் நான்கு அத்தியாயங்களைக்கொண்ட நூல் இது. பக்கம் 180—விலை ரூ. 10

ஆசிரியர்: பெரியவர் இராமமூர்த்தி

ஆன்மீக நிலையம். 113—E1 பவர் ஹவுஸ் காலனி, கிருஷ்ணகிரி-636001.

**7. தெய்வீகக் கதைகள்**

அருள்நெறிக் கதை, சிறுவர் பகுதி கதை ஆகிய தலைப்புகளின் கீழ் ஸ்ரீராமகிருஷ்ண விஜயத்தில் வெளிவந்த கதைகளின் தொகுப்பு. பக்கம் 156—விலைரூ. 9

ஆசிரியர்: வால்மீகி

அநுராகம். 54, பாண்டிபஜார், சென்னை—600017.

## சந்தாதாரர்கள் கவனிக்க

* சந்தா எண் 70,001 முதல் 71,508 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை ஜூன் மாதத்துடன் முடிவடைகிறது. பத்திரிகையைத் தொடர்ந்து அனுப்ப, அடுத்த ஆண்டுச் சந்தாத் தொகை ரூ. 15ஐ ஜூன் 25-ஆம் தேதிக்குள் அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொள்ளுகிறோம்.

* சந்தா எண் 80,001 முதல் 80,292 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை ஜூலை மாதத்துடன் முடிவடைகிறது.

* சந்தா எண் 90,001 முதல் 90,685 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை ஆகஸ்ட் மாதத்துடன் முடிவடைகிறது.

* சந்தா எண் 1,00,005 முதல் 1,00,436 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை செப்டம்பர் மாதத்துடன் முடிவடைகிறது.



# மௌனம்

சுவாமி விச்வமுனியின் கருத்தைத் தழுவி எழுதப்பட்ட கட்டுரை இது.

குயவன் மண்பானை செய்கிறான் அந்தப் பானையைக் காணும்பொழுது, 'பானை யாரால் செய்யப்பட்டது?' என்பதோடு, 'அது எதனால் செய்யப்பட்டது?' என்ற கேள்வி மனதில் எழுகிறது. அதற்கு விடையாக, மண் என்பது நமக்குக் கிடைக்கிறது. பானை உருவாவதற்கு மண் அவசியம். அதுபோல, இந்த உலகில் ஆரம்பத்திற்கு மூல முதற் காரணம் சலனமே என்கிறது வேதம். குடத்திலுள்ள நீர் தளும்பும்பொழுது சப்தமும் கூடவே உண்டாகிறது. சலனம் உண்டானால் சப்தமும் உண்டாகும்.

சலனமற்ற (அவ்யக்த) நிலையிலுள்ள மூலமுதற்பொருள் எனப்படும் பிரகிருதி மூன்று குணங்களைக் கொண்டுள்ளது. மூன்று குணங்களும் சரிசமமாக இருந்த மூலமுதற் பொருளில் சலனம் உண்டாகி, சரிசமமாக இருந்த மூன்று குணங்களின் [அவை சத்தான குணம் (சத்துவ குணம்), எப்பொழுதும் செயலில் ஈடுபடச் செய்யும் குணம் (ரஜோ குணம்), மனிதனை எந்தச் செயலும் செய்யாமல் மந்த மாக்கும் குணம் (தமோ குணம்)] விகிதம் மாறுபடும்பொழுது, படைப்பு உண்டாயிற்று. இவ்வாறு உண்டாக்கப்பட்ட உலகம் வியக்தமானது (சலனமுள்ளது). முதற் சலனம் உண்டானபோது எழும் சப்தமானது 'ஓம்' என்ற சப்தத்தை ஓரளவு ஒத்திருக்கும் என்கின்றனர் பெரியோர்.

உலகிலுள்ள ஒவ்வொரு பொருளையும் அதற்கு உரிய பெயர் (நாமம்), உருவ அமைப்பு (ரூபம்), அதனால் நாம் அடையும் பயன் (கிரியை) இவற்றால் அறிகிறோம். உதாரணமாக, குடம் (அதன் பெயர்) என்றால், குறுகிய கழுத்தும் பெரிய வயிறும் (உருவ அமைப்பு) கொண்ட, நீர் எடுக்கப் பயன்படும் (அதன் உபயோகம்) பாத்திரம் என்று அறிகிறோம். எனவே உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் இந்த நாம-ரூப-கிரியைகளில் அடங்குகின்றன. 'நான்' என்ற ஜீவனுக்கு (உயிருக்கு)ப் பக்கபலமான 'எனது' என்ற ஆசையை (அபிமானத்தை) உண்டாக்குவதும் இந்த நாம-ரூப-கிரியை வடிவமான உலகமே. உதாரணமாக, சிறுவன் தந்தை வாங்கிக் கொடுத்த பேனாவைத் தன்னுடையது என்று உரிமையாக்கிக்கொள்கிறான்.

சரிசமமான மூலமுதற் பொருளில் ஏற்பட்ட சலனம், உலகம் உண்டாவதற்குக் காரணம். அதுபோல, ஜீவனின் அந்தக்கரணத்தில் (மனதில்) ஏற்படும் சலனமே, ஜீவன் தொடர்ந்து உலகில் மீண்டும் மீண்டும் பிறப்பதற்குக் காரணம். ஓவியனின் மனதில் இயற்கைக் காட்சி ஏற்படுத்தும் சலனம், சிறந்த எழிற்படம் உருவாவதற்குக் காரணமாகிறது. ஜீவனின் அந்தக்கரணம் எனப்படும் மனதில் உண்டாகும் சலனம்

## சிந்திக்க...



நம்மைப்பற்றி நாம் எப்போதும் பிரமாதமாக நினைத்துக்கொண்டிருக்கிறோம். ஆகவே நம் உண்மையான சுய உருவத்தை யாராவது எடுத்துச் சொன்னால், அவர்கள் நம்மை அவமானப்படுத்திவிட்டார்கள் என்று நாம் கூறுகிறோம்.

—ஓர் அறிஞர்

ஸ்தூலவடிவமாகும்போது, சங்கற்பமாகி, அந்தச் சங்கற்பம் திடமாகி ஆசையாகிறது. இந்த ஆசைதான் ஜீவன் உண்டாவதற்குக் காரணமாகிறது. ஆசை அழிய வேண்டும் என்றால், சங்கற்பம் அழிய வேண்டும். அதுவே சம்சார (மீண்டும் மீண்டும் பிறத்தல்) ஒழிவு. அவ்வாறெனில், மனதில் ஏற்படும் சலனம் நின்று, மன மௌனம் கிட்ட வேண்டும். மன மௌனத்திற்கு வாக்கு மௌனமே முதன்மையானது. அதுவே முக்தி (பிறப்பற்ற நிலை) தரும் முதல் சாதனமாகும். 'ஓம்' என்ற பிரணவத்தில் மனதை ஒடுக்க வேண்டும். இதனையே, 'சும்மா இரு, மௌனமாக இரு' என்று அனைத்துச் சான்றோரும் அறிவுறுத்துகின்றனர்.

சாத்திரங்கள் கூறும் அழிவற்ற நிலைக்கு அழைத்துச் செல்லும் 'அகங்காரி-சாட்சி யோக'த்திற்கு மிகவும் அனுகூலமானது மௌனம் ஆகும்.

ஆதிசங்கரர் விவேகசூடாமணியில், 'யோகத்தின் முதல் வாயிற்படியே மௌனம்' என்கிறார். 'பேச்சுக் குறையும் பொழுது, மனம் அடங்குகிறது. இதனால் புத்தி அடங்கி, அது சாட்சியாகிய கூடஸ்தனிடம் அடங்குகிறது. சாட்சி, குணங்களுக்கும் எண்ணங்களுக்கும் அப்பாற்பட்ட பூரணமான பரமாத்மாவில் ஒடுங்குகிறது. இதனால் எல்லையற்ற சாந்தி உண்டாகிறது' என்கிறார்.

சாந்திநிலை மேலோங்கி வரும்பொழுது மனதிற்கு ஒருமுகப்படும் தன்மை வலிமையடைகிறது.

மனதில் ஏற்படும் சலனம் அல்லது சப்தம் நான்கு வகைப்படும். இதில் ஸ்தூலமான சப்தம் வைகரி ஆகும். இது நாம் வாக்கு மூலம் வெளிப்படுத்தும் சலனம். அதற்கும் சூட்சுமமானது மத்யமா, பின்பு பச்யந்தி என்றும், முடிவில் பரா என்றும் முடியும் என்பர்.

வாக்கு மௌனத்தின் மூலம் வைகரியைக் கட்டுப்படுத்துகிறோம். இதனால் மனச் சலனங்கள் குறைந்து சாந்திநிலை உண்டாகும். மனம் தூய்மையடைய, வைகரிக்கும் சூட்சுமமான மத்யமாவில் மனம் ஒடுங்குகிறது. மத்யமா, தொண்டைக் குழியில் உள்ளது. இந்த நிலையில் ஓங்காரத்தைச் சொல்லாமல் சொல்லி வருவோம். இதன் முதிர்ச்சியில்தான் தட்சிணாமூர்த்தியின் தரிசனம் நமக்குக் கிட்டும். பின்பு, அந்த மூர்த்தமே வழிகாட்டி, மத்யமாவிற்கும் சூட்சுமமான இதயத்திலுள்ள பச்யந்தியில் மனதை ஒடுக்குகிறது. இந்த நிலையை அடைந்தும், மனதில் மூன்று குணங்களால் உண்டாகும் சலனம் நின்றுவிடுவதில்லை. எனினும், சுத்த குணமே மிஞ்சுகிறது. பின்பு மனம் கொப்பூழில் உள்ள பராவில் ஒடுங்கும்பொழுது சுத்த குணமும் ஒடுங்கி, மூன்று குணங்களுக்கும் அப்பாற்பட்ட சத்து சித்து ஆனந்தத்தில் ஆழ்கிறது. இதுவே உற்பத்தியின் ஒடுக்கமாகும்.

## தீப ஆராதனையின் பலன்

ஐந்து அடுக்குள்ள அலங்காரதீபம் பஞ்ச கலைகளைக் குறிக்கிறது. மூன்று அடுக்குள்ள தீபம் மூன்று தத்துவங்களைக் குறிக்கிறது. இந்தத் தீபங்களால் ஆராதனை செய்தால் ஆன்மா சுத்தியடையும். நாக தீபம் புத்திர விருத்தியின்பொருட்டும், இடப தீபம் பசு விருத்தியின்பொருட்டும், புருஷ தீபம் சகல சித்தி அடைய வேண்டியும், நட்சத்திர தீபம் நோய் நீங்கும்பொருட்டும், வித்தை அளிக்கும்பொருட்டும், கும்ப தீபம் மலநிவாரணத்திற்காகவும், ஐந்து தட்டுகள் ஈசானம் முதலிய ஐந்து குணங்கள் பதியும்பொருட்டும், தூப தீபம் சாரூப பதவியின்பொருட்டும், செம்பருத்தி, நிம்பபத்திரம் இவை திருஷ்டி தோஷம் நீங்கும்பொருட்டும், விபூதி மூன்று உலகரட்சையின் பொருட்டும் ஆராதிக்கப்படுகின்றன.



# ஆன்மிக வினா-விடை

## சுவாமி கமலாத்மானந்தர்

**கேள்வி :** சிவதாண்டவத்தின்போது சிவபெருமான் நெற்றிக் கண்ணைத் திறந்து பார்த்தார். அது காரணமாக உலகம் எரிந்து சாம்பலாயிற்று. உலகை அழிப்பது கொடிய செயல் என்றாலும் இதைச் சிவலீலை என்று கொள்வதா? அல்லது தத்துவரீதியில் இதற்கு விளக்கம் உண்டா?

**பதில் :** மூன்றாவது கண் என்பது ஞானக் கண். தியான யோகத்தில் சித்திபெற்ற ஞானி, ஞானக் கண் கொண்டு உலகைப் பார்க்கும்போது பெயரும் வடிவமும் (நாமரூபம்) கொண்ட உலகம் மறைந்து, ஒன்றேயான பரப்பிரம்மம் மட்டுமே அவனுக்கு அனுபவமாகிறது. இதுவே தாங்கள் குறிப்பிட்டிருக்கும் சிவலீலையில் அடங்கியுள்ள உட்கருத்து.

மரத்தினால் செய்யப்பட்ட யானைப்பொம்மையை, மரம் என்று மட்டும் பார்க்கும்போது யானையின் தோற்றம் மறைந்து இல்லாமல் போவது போன்றது இது.

**கேள்வி:** கடந்த பல ஆண்டுகளாக அற்புதத் திருவந்தாதிக்கு கி. வா. ஜகந்நாதன் விஜயத்தில் விளக்கம் எழுதி வந்தார். இப்போது அது முற்றுப்பெற இருக்கிறது. அடுத்து அவர் விஜயத்தில் ஏதேனும் தொடராக எழுதுவாரா?

**பதில் :** திருவாசகத்திலிருந்து ஏதேனும் ஒரு பகுதிக்கு விளக்கவுரையைத் தொடர் கட்டுரையாக எழுதித் தருவதாகக் கூறியுள்ளார்.

**கேள்வி :** ஒருவரின் விதிப்படி அவர் இல்லறத்தைத்தான் மேற்கொள்ள வேண்டும். ஆனால் அவர் சிறுவயது முதற் கொண்டே துறவறத்தில் நாட்டமுடையவர். எனவே அவர் துறவறத்தை மேற்கொண்டு சென்றுவிடுகிறார். பிறகு அவருக்கு ஏதேனும் இடையூறு ஏற்பட்டு மீண்டும் இல்லறத் தில் ஈடுபடுவாரா? அல்லது இறைவன் அவருக்கு உதவி புரிந்து துறவறத்திலேயே தொடர்ந்து இருப்பாரா?

**பதில் :** தீவிர வைராக்கியம், பரிசுத்தமான வாழ்க்கை, நல்லோர் தொடர்பு ஆகியவை இல்லாதவர் துறவறம் மேற்கொண்டால் அதை நடத்தத் திறமை இல்லாமல் நழுவக்கூடும்.

நழுவுதலின்றிக் காக்கத் தெய்வபக்தியும் குரு கிருபையும் வேண்டும். தன்னுடைய பலம் மட்டும் போதாது. தெய்வத்தைத் திடமாகப் போற்றி வழி பட்டால் தெய்வம் உதவிபுரியும். 'கடவுளை நம்பினோர் கைவிடப்படார்' என்பது உண்மை, உண்மை, முக்காலும் உண்மை.

**கேள்வி :** ஒவ்வொருவருக்கும் விதிப்படிதான் அனைத்தும் நடக்கும் என்று கூறுகிறார்கள். ஆனால் சிலர் விதியை மதியால் வெல்லலாம் என்று கூறுகிறார்கள். விதியை மதியால் வெல்ல முடியுமா?

**பதில் :** ஒரு பந்தை மேலே தூக்கி எறிந்தால் அது கீழே விழ வேண்டும் என்பது விதி. ஆனால் அதைக் கீழே விழாமல் மதியால் தடுக்கலாம்.

தண்ணீர் மேட்டிலிருந்து பள்ளத்திற்கு ஓடுவது விதி. அதன் ஓட்டத்தை அணை கட்டி நிறுத்தி நீரை வேறு வகையில் பயன்படுத்தலாம். அது போல் விதியை மதியால் வெல்லலாம். இங்கே மதி என்றது தெய்வபக்தி, நல்லொழுக்கம் ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்த மதியைக் குறிக்கும்.



மார்க்கண்டேயனுக்குப் பதினறு வயதில் சாவு என்று விதி. அதைச் சிவபக்தியால் வென்று என்றும் சிரஞ்சீவி ஆனுன் சாவா மார்க்கம் கண்ட மார்க்கண்டேயன்.

சாவித்திரியின் கணவஞன சத்தியவானுக்குத் திருமணம் நடந்த ஒரு வருடத்திற்குப் பிறகு மரணம் என்பது விதி. அந்த விதியைச் சாவித்திரி தன் தவத்திஞல் வென்ருள்.

ஆணவம், தீயொழுக்கம் ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்த மதியினல் விதியை வெல்ல முடியாது. இதற்கு ராவணனை உதாரணம் காட்டி 'விதியை வெல்ல முடியாது' என்ற தலைப்பில் ஏற்கனவே விஜயத்தில் ஓர் அருள்நெறிக் கதை வெளிவந்துள்ளது. கூடிய விரைவில் ஊழ்வினையைக் குறித்த ஓர் ஆராய்ச்சிக் கட்டுரையை விஜயத்தில் வெளியிட எண்ணியுள்ளேன்.

**கேள்வி: கோயில் முன்கோபுரங்கள் சிலவற்றில் ஆபாசமான சிலைகள் அமைந்திருப்பதைப் பார்க்கிருேம். இது சரியானதா?**

**பதில்:** தேவ தேவியர் சிலைகள், புராண நிகழ்ச்சிகளைச் சித்திரிக்கும் சிலைகள், நவரச உணர்வுகளை வெளிப்படுத்தும் சிலைகள் ஆகியவற்றைக் கோபுரங்களில் அமைக்கலாம். மற்றப்படி ஆபாசமான சிலைகள் கோபுரங்களில் இடம் பெறுவதற்கு எந்த ஒரு சாஸ்திரப் பிரமாணமும் அறவே இல்லை. இவை இருப்பது சாஸ்திரங்களுக்கு முரணனது, பொருந்தாதது, தவருனது.

**கேள்வி : உபநிஷத சாந்திபாடத்தில் மூன்று முறை சாந்தி சொல்வது ஏன்?**

**பதில் :** மனிதனுக்குத் துன்பம் மூன்று விதத்தில் வரும். அவை 1. ஆத்யாத்மிகம் (தனது உடல் மனம் ஆகியவற்றிலிருந்து வருவது), 2. ஆதிபௌதிகம் (நம்மைச் சுற்றியிருக்கும் பஞ்ச பூத வடிவமான இயற்கையிலிருந்து வருவது), 3. ஆதிதைவிகம் (தெய்வவசமாக, பூர்வ கர்மம் அல்லது அதிருஷ்ட வசமாகக் கண்ணுக்குப் புலப்படாமல் சூட்சுமமாக வருவது) எனப்படும். மேற்கூறிய மூன்று வகைத் துன்பமும் நீங்கும்பொருட்டு மூன்று முறை சாந்தி பாடம் சொல்கிருேம்.

**கேள்வி: விதியை மதியால் வெல்லலாம் என்பது ஒரு கருத்து. விதியை வெல்ல முடியாது என்பது மற்ருெரு கருத்து. இதில் எது உண்மை?**

**பதில் :** இரண்டும் உண்மையே. இரண்டு விதமாகவும் சொல்வதற்குச் சாஸ்திரப் பிரமாணங்கள் இடம் தருகின்றன.



# துளசிதாசரின் வேண்டுகோள்

தமிழில்: எஸ்.பி. ராஜகுமாரி

துளசிதாசர் இயற்றிய 'விநய பத்திரிகா' என்ற நூலிலிருந்து சில பகுதிகள்.

ராமா! நான் கெட்டவனுக இருந்தாலும், நல்லவனுக இருந்தாலும் உனக்கே சொந்தமானவனே. பிறர் உள்ளத்தை அறிந்த உன்னிடம் நான் பொய் சொல்ல முடியுமா?

தூய சொல், செயல், எண்ணம் இவற்றைக் கொண்டு கூறுகிறேன்—''நான் உனக்குச் சொந்தமானவன். இதில் கபடம் ஏதும் இல்லை. கயிற்றின் மீது தண்ணீர் பட்டால் அது எப்படி மேலும் இறுகுமோ, அதுபோல இறுகுவது என் பிடிவாதம்.''

என்னை ஆதரிப்பார் வேறு யாரும் இல்லை என்றுலும், இந்திரன், பிரம்மா, தேவர், மானிடர், முனிவர் ஆகியோரையும் ஆராதனை செய்யும் நோக்கம் எனக்கு இல்லை. யானையைப் போன்ற பருத்த சேவை செய்தாலும், அதற்கு நாயைப் போன்ற துச்சமான பலனைக் கொடுக்கும் சுயநல வியாபாரிகள் இவர்கள்.

துன்புற்ற ஏழைகளை ஆதரிப்போர் உன்னைத் தவிர வேறு யாரும் இல்லை.

திவ்ய தேவா! 'நான் உன் அடிமை' என்ற இந்தக் கூற்று பொய் என்றுல், பாம்பை வசப்படுத்தும் வித்தையைப் அறியாமல் பாம்புக் கூட்டுக்குள் நுழைந்தால், அவனை எப்படிப் பாம்பு கடித்துவிடுமோ, அது போல, எந்தக் கடும் தண்டனையையும் நீ எனக்கு அளிக்கலாம்.

ஆனல், 'நான் உன் அடிமை' என்ற என் கூற்று உண்மை என்று நிருபணமாக அதை உறுதிப்படுத்தும் வகையில், பொதுமக்களின் முன்னிலையில் தாம்பூலம் அளிப்பாயாக!

துளசிதாசன் என்ற சாதகப் பறவைக்கு ஸ்ரீராமவடிவம் என்ற கருமேகத்தின் மீதுதான் ஆசை இருக்கிறது.

* * *

ஸ்ரீராமா! நீ என்னைக் கைவிட்டாலும் நான் உன்னை விடப்போவதில்லை. ஏனெனில், உன் திருவடிகளை விடுத்து, வேறு யாரிடம் நான் அன்பு காட்டுவேன்?

உன்னைப் போல நன்மை அளிக்கும் வேறு யாரைப்பற்றியும் நான் காதால் கேட்டதில்லை, கண்ணுல் கண்டதும் இல்லை, என்னுல் கற்பனை செய்யவும் முடியவில்லை.

ரகுநாதா! நான் மூடன், நீ ஈச்வரன்; நான் மாயையின் அடிமை, நீ மாயையின் தலைவன்; நான் துச்சமான யாசகன், நீ கொடைவள்ளல்; நான் உன் தீய புதல்வன், நீ என்னைக் காக்கும் தாய் தந்தை.

துளசிதாசனுகிய நான் தேவை என்று யாராவது கேட்டால், விலை ஏதுமின்றியே நான் அவர்களிடம் விற்கப்பட்டுவிடுவேன். ஆனல் இந்த நீசனை உன்னைத் தவிர வேறு யார் வாங்குவார்கள்? எனவே நான் என்றும் உன்னை விடமாட்டேன்.

* * *

ஹே ராமா! நீ என்னை அலட்சியம் செய்தாலும் எனக்கு உன் மீது உள்ள அன்பு குறையாது. துன்பத்தில் உழல்

கிறவர்களும் சுயநலக்காரர்களும், பைத்தியக்காரனைப் போலத்தான் பேசுவார்கள்.

சாதகப் பறவைக்கு உயிர் அளிக்கும் கருமேகம் சாதகப் பறவையிடம் என்ன எதிர்பார்க்கிறது? மேகத்தினிடம் நீங்காத அன்பைக் காட்டுவதனுல்தான் சாதகப் பறவை புகழப்படுகிறது. மேகம் பலன் எதையும் எதிர்பார்க்காமலே மழையைப் பொழிந்து, சாதகப் பறவைக்கு உயிர் அளிக்கிறது. ஆனுல் அந்தப் பறவையின் அபூர்வ அன்பைக் கண்டவர்கள் அந்தப் பறவையையே புகழ்கின்றனர்.

புனிதமான, ஜீவாதாரமான நீருக்கு மீனிஞல் சிறிதளவும் லாபமில்லை. ஆனுல் மீனுக்கு நீரை விடுத்து உயிர் வாழ்வதற்கு வேறு இடம் உண்டா? அதே போல, என்னுல் உனக்குச் சிறிதளவு லாபமும் இல்லை என்ருலும் நான் உன்னை விட்டு எங்கே போவேன்?

நான் என்னை உனக்கு ஆத்ம சமர்ப்பணம் செய்கிறேன். எப்போதும் சிறியவர்கள் பெரியவர்களின் பாதுகாப்பிஞலேயே காக்கப்படுகிருர்கள்.

நல்ல நாணயங்களுடன் கலந்து கெட்ட நாணயங்களும் செல்லுபடி ஆகிவிடுகின்றன. அதே போல, இந்த உன் சபையிலும், நல்லவர், கெட்டவர் யாவருக்கும் நன்மை ஏற்பட்டுவிடுகிறது. அதனுல் சுகமளிக்கும் ராமநாமத்தின் மீது எனக்கு அளவற்ற நம்பிக்கை இருக்கிறது.

* * *

ஸ்ரீராமபிரானே! உன்னிடம் பிடிவாதமாக இருக்க வேண்டும் என்ற பிரதிக்ஞையுடன் உன் வாசலிலேயே வீழ்ந்து கிடக்கிறேன். என் பிரபுவான உன் மீது சபதம் செய்து சொல்கிறேன்—'நீ என்னுடையவன்' என்று நீ கூறும் வரையிலும் நான் என் வாழ்நாள் முழுவதிலும் எழுந்திருக்கப்போவதில்லை.

யமதூதர்களும் என்னை எழுப்புவதற்கு, அடித்து அடித்துத் தளர்ந்து விட்டார்கள். நான் நகர்ந்து கொடுக்கவே இல்லை. உலகில் பல ஜன்மங்களை எடுத்து, இந்த நரகத்தை விட்டுக் கிளம்பிக் கிளம்பியிருக்கிறேன்.

எந்தப் பொருளுக்காகப் பிடிவாதம் கொண்டிருக்கிறேஞே, அந்தப் பொருளைப் பெருமல் விடமாட்டேன். ஏனெனில், என் பிடிவாதத்தைப் பார்த்து, நீ அதை எனக்கு அளிக்க வேண்டி வரும்.

ஆத்ம சமர்ப்பணமே! நீ தயாளன், நீ கொடுத்தால்தான் காரியம் முடியும். தாமதம் செய்ய வேண்டாம். ஏனெனில், நான் களைப்பிஞல் தளர்ந்துகொண்டிருக்கிறேன்.

நான் பெரும் குற்றவாளியாக இருக்கிறேன். அதனுல் என்னை 'நீ என்னுடையவன்' என்று வெளிப்படையாகச் சொல்வதற்கு நீ சங்கோசப்பட்டால், தயையுடன் இந்தத் துளசிதாசனை உன் மனதில் ஏற்றுக்கொள்ளுவாயாக! ஏனெனில், கலியுகத்தைக் கண்டு நான் மிகவும் பயந்துவிட்டிருக்கிறேன்.

* * *



அருள் நெறிக் கதை

# குபேரன் கொட்டிய தங்கம்

— நாடோடி

மகரிஷி வரதந்துவுக்குக் கௌத்ஸன் என்ற சீடன் இருந்தான். மகரிஷி அவனைத் தம் மகனைப் போலவே வளர்த்து வந்தார்.

கௌத்ஸன் குருவினிடம் கற்றுக்கொள்ள வேண்டிய எல்லாச் சாத்திரங்களையும் கற்றுக்கொண்ட பிறகு வீடு திரும்பினான். அதற்கு முன்பு அவருக்குக் குருதக்ஷிணை கொடுக்க வேண்டும் என்று விரும்பினான்.

''உங்களுக்கு நான் என்ன குருதக்ஷிணை கொடுக்க வேண்டும்?'' என்று கேட்டான். தியாகசீலரான மகரிஷி அவனிடம் ஒன்றும் கேட்க விரும்பவில்லை.

''நீ சாத்திரங்கள் நன்கு பயின்றதே குருதக்ஷிணை கொடுத்த மாதிரி. எனக்கு ஒன்றுமே வேண்டாம்'' என்றார்.

இருந்தாலும் கௌத்ஸன் அவரை விடவில்லை. திரும்பத் திரும்ப வற்புறுத்திக் கேட்டான். ''தங்களுக்குக் குருதக்ஷிணை கொடுக்காமல் நான் எப்படிச் சந்தோஷமாக இருக்க முடியும்?'' என்றான்.

அவனுடைய வற்புறுத்தலைப் பொறுக்க முடியாமல் ரிஷி, ''நீ என்னிடம் பதினான்கு வித்யைகளைக் கற்றுக்கொண்டிருக்கிறாய். ஒரு வித்யைக்கு ஆயிரம் மோகரா வீதம் பதினாலாயிரம் மோகராக்கள் கொடு'' என்று சொன்னார்.

இதைக் கேட்டுக் கௌத்ஸன் துளியும் கவலைப்படவில்லை. அயோத்தியைத் தலைநகராகக் கொண்டு பாரதத்தை ஆட்சி புரிந்த அரசன் ரகுவினிடம் சென்றால் அவன் என்ன பொருள் கேட்டாலும் கொடுப்பான் என்பது அவனுக்குத் தெரியும்.

கௌத்ஸன் அரசனிடம் சென்றான். அரசன் செய்த அதிதி பூஜைகளை ஏற்றுக்கொண்டான். உடனே எழுந்து வெளியே செல்ல ஆரம்பித்தான்.

இதைக் கண்ட அரசன் ஆச்சரியமடைந்து, ''அதிதியாக வந்த தாங்கள் என்னை ஒன்றும் கேட்காமல் போகிறீர்களே; ஏன்? என்று கேட்டான்.

கௌத்ஸன், ''அரசே! நான் உன்னிடம் பொருளைப் பெறுவதற்காகத்தான் வந்தேன். ஆனால் நீயோ விச்வஜித் யாகம் செய்து எல்லாப் பொருள்களையும் தானம் செய்துவிட்டாய் என்று தெரிகிறது. அதிதி பூஜைக்குக்கூட நீ மண்பாத்திரம்தான் வைத்திருக்கிறாய். நான் குருதக்ஷிணைக்காகப் பதினாலாயிரம் மோகராக்கள் கேட்க வந்தேன். உனக்கு மனக் கஷ்டத்தைக் கொடுக்க விரும்பவில்லை'' என்றான்.

''ஓர் அதிதி என்னிடம் வந்து ஒன்றும் பெற்றுக் கொள்ளாமல் போவது என்பது கூடாது. மூன்று நாள் இங்கு இருங்கள். நீங்கள் கேட்டதை நான் கொடுக்காமல்



அனுப்பமாட்டேன்'' என்றான் அரசன்.

எல்லா அரசர்களும் அவரவர்கள் கட்ட வேண்டிய கப்பத்தைக் கட்டிவிட்டதனால் இனி மேல் அவர்களைக் கேட்பது என்பது முடியாது. ஆகவே குபேரன் ஒருவன்தான் மீதி; அவன் மீதுதான் படையெடுக்க வேண்டும் என்று தீர்மானித்துத் தன் ரதத்தில் ஆயுதங்களையெல்லாம் எடுத்து வைக்கச் சொன்னான் ரகு.

அப்பொழுது பொக்கிஷ அதிகாரி ஓடி வந்து, ''குபேரன் நம் பொக்கிஷத்தில் சுவர்ணங்களாகக் கொட்டிக் , கொண்டிருக்கிறான்'' என்று சொன்னான்.

''அப்படியானால் அத்தனையையும் தாங்கள்தாம் எடுத்துக் கொள்ள வேண்டும்'' என்றான் அரசன் கௌத்ஸனைப் பார்த்து.

''எனக்கு வேண்டியவை குரு தக்ஷிணைக்காகப் பதினாலாயிரம் மோகராக்கள்தாம். அதற்கு மேல் ஒரு மோகராக்கூட எனக்கு வேண்டாம்'' என்றான் கௌத்ஸன்.

''அப்படியானால் குபேரன் உங்களுக்காகக் கொடுத்த சுவர்ணத்தை நானும் எடுத்துக்கொள்வதற்கில்லை. ஆகவே மீதியை அந்தணர்களுக்கே கொடுக்கிறேன்'' என்று சொல்லி, அந்தணர்களுக்குக் கொடுத்தான் ரகு.

இப்படிப் போட்டி போட்டுக் கொண்டு தியாகம் செய்தவர்கள் ஒரு காலத்தில் நம் நாட்டில் ஏராளமாக இருந்தனர். ●

★ பூஜ்ய ஸ்ரீமத் சுவாமி வீரேச்வரானந்தஜி மகராஜ் அவர்கள் மே 11-ஆம் நாள் செங்கல்பட்டு ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் கிளைக்கு விஜயம் செய்தார்கள்.

அங்கு அவர்கள் ஆச்ரமத்தைச் சேர்ந்த 'சாரதா குடீரம்' என்ற புதிய கட்டிடத்தைத் திறந்துவைத்தார்கள்.




# ஒரு கிளியின் கதை

சத்தியகாமன்

காசி தேசத்தில் ஒரு சமயம் வேடன் ஒருவன் வாழ்ந்து வந்தான். அவன் ஒரு நாள் மான்களை வேட்டையாடக் காட்டுக்குள் சென்றான். அங்கு அவன் விஷம் தடவிய அம்பை மான் கூட்டத்தில் இருந்த ஒரு மானின் மீது எய்தான். அவன் வைத்த குறி தவறி, அருகில் இருந்த ஒரு பெரிய மரத்தில் சென்று தைத்தது.

விஷத்தின் வேகம் காரணமாக மரத்தின் இலைகளும் காய் கனிகளும் மெல்ல மெல்ல உதிர்ந்து, நாளடைவில் அந்த மரமே காய்ந்து போய்விட்டது.

அந்த மரத்தின் ஒரு பொந்தில் வெகு காலமாக ஒரு கிளி வாழ்ந்து வந்தது. மரம் பட்டுப்போகத் துவங்கியதும், அந்த மரம் வளமாக இருந்தபோது அதில் வாழ்ந்த மற்ற எல்லாப் பறவைகளும் அதை விட்டு நீங்கி, வேறு மரங்களை நாடிப் பறந்துவிட்டன.

ஆனால் இந்த ஒரு கிளி மட்டும் அந்த மரத்தின் மீது மிகவும் அன்பு கொண்டிருந்த காரணத்தால், மரம் உலர்ந்து போன நிலையிலும் அதைவிட்டு நீங்காமல் அங்கேயே வாழ்ந்து வந்தது. இரை தேடவும் அது மரத்தை விட்டு வெளியில் எங்கும் செல்லவில்லை. இவ்விதம் ஆகாரமும் இல்லாமற் போனதனால், மரத்தைப் போலவே கிளியின் உடலும் வாடி வதங்கியது. உடல் மிகவும் பலவீனம் அடைந்ததனால் சரியானபடி குரல் எழுப்பவும் முடியாமல் அதன் குரல் தட்டுத் தடுமாறியது.

இப்படிப்பட்ட இந்தக் கிளியின் நடத்தையைக் கண்டு இந்திரன் பெரிதும் ஆச்சரியப்பட்டான். எனவே அவன் அந்தக் கிளியைப் பார்ப்பதற்குத் தேவலோகத்திலிருந்து பூவுலகிற்கு வந்தான். அவன் மனிதவடிவம் எடுத்துக்கொண்டு கிளியை அணுகி, ''கிளியே, நீ இப்போது இருக்கும் இந்த மரத்தில் இலைகளோ கனிகளோ அறவே இல்லை. உலர்ந்து போயுள்ள கிளைகள் எந்த நிமிடமும் ஒடிந்து விழும் என்ற நிலையில் இந்த மொட்டை மரம் இருக்கிறது. இதே காட்டில் அடர்ந்த இலைகளும் கனிகளும் கிளைகளும் கொண்ட செழிப்பு வாய்ந்த மரங்கள் ஆயிரக்கணக்கில் இருக்கின்றன. அங்கெல்லாம் உன்னைப் போன்ற பறவைகள் வாழத் தகுந்த நல்ல பொந்துகளும் இருக்கின்றன. அவற்றில் ஏதேனும் ஒன்றுக்கு நீ சுலபமாகச் சென்று ஆனந்தமாக இருக்கலாமே! நீ ஏன் அவ்விதம் செய்யாமல் இந்தப் பட்டுப்போன மரத்தையே கட்டிக்கொண்டு அழுகிறாய்? இங்குஇருந்து நீ ஏன் இப்படிக் கஷ்டப்பட வேண்டும்? உடனடியாக இந்த உலர்ந்த மரத்தை விட்டு நீங்கி நல்ல மரத்திற்குச் சென்றுவிடு'' என்று கூறினான்.

தான் கேட்பது சரியல்ல என்பது இந்திரனுக்கு நன்கு தெரிந்துதான் இருந்தது. எனினும் கிளியைச் சோதிப்பதற்காகவே அவன் அப்படிக் கேட்டான்.

இந்திரன் கேட்டதும் கிளி அவனை உரிய முறைப்படி வணங்கி மரியாதை செய்துவிட்டு, தீனமான குரலில் கூறியது- ''தேவேந்திரா! தங்களுக்கு என் மனமார்ந்த நல்வரவைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். மனித உருவத்தில் தாங்கள் இங்கு எழுந்தருளியபோதிலும்

தவம் காரணமாகத் தங்களை இன்னார் என்று தெரிந்துகொண்டேன். தேவர்களுக்கு அரசே! நான் இந்த மரத்தில் தான் பிறந்தேன். இதே மரம்தான் என் இளவயதில் என்னைக் காப்பாற்றி வளர்த்து ஆளாக்கியது. இதே மரம் தான் நல்ல நிலையில் இருந்தபோது எனக்கு ஆதரவு அளித்து நான் தின்பதற்கு வேண்டிய பழங்களைக் கொடுத்தது. எதிரிகள் என்னைப் பிடிக்க முயன்ற காலங்களிலெல்லாம் எனக்கு அடைக்கலம் தந்து என்னை இந்த மரம்தான் பாதுகாத்தது. இப்போது இந்த மரம் கஷ்டதசையில் இருக்கிறது. மரம் நலிவுற்று வாடும் நிலையில் இருக்கும் பொழுது, நான் மகிழ்ச்சியாக இருக்க வேண்டும் என்ற என் சுயநலத்தை முன்னிட்டு இதை விட்டு நான் எப்படி வேறு இடத்திற்குப் போவேன்? இந்த மரம் நல்ல நிலையில் இருந்தபோது நானும் இதனுடன் மகிழ்ச்சியாக இருந்தேன். இப்போது மரம் வாடிச் சாகும் நிலையில் இருக்கும்போது இதை விட்டு நான் நீங்குவது சரியல்ல. காலமெல்லாம் இதனோடு வாழ்ந்த நான் இதன் துன்பத்திலும் பங்குகொண்டு இதனுடனேயே இறந்துபோவேன். இந்த மரம், தான் சிறந்திருந்த காலத்தில் என்னை வளமாக வாழ வைத்தது. இப்போது அவல நிலை ஏற்பட்டு இது துன்புறும் காலத்தில் நானும் இதனுடன் இருந்து துன்பத்தைச் சகித்துக்கொள்வதுதான் நியாயமானது.

★ விழுப்புரம், ஸ்ரீராமகிருஷ்ண சேவா சங்கத்தின் அலுவலகம், நூலகம் ஆகியவற்றின் திறப்பு விழா மே 11-ஆம் நாள் நடைபெற்றது. விழாவில் கலந்துகொண்டு சுவாமி ராகவேசானந்தர் உரையாற்றினர்.



உதவி செய்தவர்களிடம் பரிவும் பாசமும் கொண்டு நடந்துகொள்வதுதான் சரியானது. பிறரிடம் பரிவோடு நடந்து கொள்வதுதான் சான்றோருக்கு எப்போதும் மனநிறைவைத் தரும். இது அனைத்தும் தாங்கள் அறிந்ததே. பிறந்து வளர்ந்த மரத்தின் மீது அன்பு கொண்டு இங்கேயே இருக்கும் என்னிடம், தேவர்களுக்கும் அரசராக உயர்ந்த நிலையில் இருக்கும் தாங்கள் பரிவு கொள்வதற்கு மாறாக, 'மரத்தை விட்டுப் போ!' என்று உபதேசிப்பது எப்படிச் சரியாகும்? தாங்கள் தரும் புத்திமதி எனது நல்ல விரதத்தைக் குலைப்பதாக அல்லவா இருக்கிறது? தேவர் அனைவருக்கும் மன்னராக இருந்து தர்ம விஷயமாகத் தேவர்களுக்கு ஏற்படும் சந்தேகங்களையும் நீக்க வேண்டிய நிலையில் தாங்கள் இருக்கிறீர்கள். அத்தகைய தாங்களே எனக்கு அதர்மமாக உபதேசித்து, என் பிறவி கடைத்தேறுமற் போக வழி சொல்வதா?'' என்று வினவியது.

மரத்தினிடம் அன்பும் நன்றியுணர்ச்சியும் கொண்ட கிளியின் பதிலைக் கேட்டு, இந்திரன் மிகவும் மகிழ்ச்சியடைந்தான்.

அவன் கிளியிடம், ''கிளியே! உன்னை உலகிற்குத் தந்ததனால் உன் தாய் சிறந்த சந்ததியை உலகிற்கு வழங்கியவள் ஆகிறாள். நீ தர்மநெறியைக் கடைப் பிடிக்கிறாய். நண்பர்கள் என்றால் உன்னைப் போலத்தான் இருக்கவேண்டும். பொதுவாக ஒருவர் செழிப்புடன் இருக்கும்போது மக்கள் அவருடன் இருந்து கூடிக் குலாவி மகிழ்ச்சியாக வாழ்வார்கள். அவர் நொடிந்து போனாலோ மக்கள் அவரை விட்டு நீங்கிவிடுவார்கள். இதற்கு மாறாகச் சுகத்தையும் துக்கத்தையும் சமமாக ஏற்றுக்கொண்ட உன்னைப் பாராட்டுகிறேன். நீ என்னிடம் உனக்கு விருப்பமான வரம் ஏதாவது கேள், தருகிறேன்'' என்று கூறினான்.

கிளி, ''இந்த மரம் மீண்டும் முன்பு போலவே இலை, பூ, கனிகளுடன் செழிப்பாக இருக்க வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டது.

பிறர் துன்பப்படுவதைக் காணச் சகிக்காத அந்தக் கிளியின் குணநலன்களைக் கண்டு வியந்த தேவேந்திரன், ''அப்படியே வரம் தந்தேன்'' என்று சொல்லிக்கொண்டே அந்த மரத்தின் மீது அமிர்தத்தைப் பொழிவித்தான்.

மறு விநாடியே மரம் முன்பு இருந்ததைவிடவும் பல மடங்கு அழகிய இலைகளுடனும் மலர்களுடனும் கனிகளுடனும் செழிப்புடன் திகழலாயிற்று. கிளியும் அந்த மரத்தில் மிக்க நீண்ட காலம் சுகமாக வாழ்ந்தது. காலகதியில் அது இறந்த பிறகு இந்திரலோகம் போய்ச் சேர்ந்தது.

பக்தியுள்ள ஒரு மனிதனை அணுகினால் எப்போதும் நன்மைதான் ஏற்படும்.

மேற்கண்ட கதையைத் தர்மபுத்திரருக்குக் கூறிய பீஷ்மர், ''தர்மபுத்திரரே! பிறர் துன்பப்படும்போது இந்தக் கிளியைப் போலவே எவன் பரிவு கொள்ளுகிறானோ, அவன் மேன்மை பெறுவது நிச்சயம்'' என்று கூறினார்.

—மகாபாரதம், அனுசாசன பர்வம்

● ஆசையை அழிப்பதே தவம்.

—பாகவதம்

● உத்தம மனிதன் கர்மங்களை விட்டு, ஆத்மஞானத்திலும் புலனடக்கத்திலும் வேதாந்த சிந்தனையிலும் முயற்சியுடையவனாக இருக்க வேண்டும். இதுதான் பிறவிப் பயன்.

—மனு ஸ்மிருதி

● பிறரிடம் என்ன குணங்கள் இருக்கின்றன என்று பார். ஆனால் உன்னிடம் என்ன குறைகள் இருக்கின்றன என்று கவனி.

—யாரோ



# திருத்தணிகை முருகன்

## ராஜம் ஜயராமன்

திருத்தணி முருகன்
உற்சவர்

### தலப் பெருமை

''மலர்களில் சிறந்தது தாமரை; நதிகளில் சிறந்தது கங்கை; நகரங்களில் சிறந்தது காஞ்சி; மலைகளில் சிறந்தது தணிகை'' என்று கந்த புராணம் இயற்றிய கச்சியப்ப சிவசாரியார் போற்றுகிறார்.

'தானே தனக்கு நிகராக விளங்கும் தணிகாசலம்' என்று ராமலிங்க அடிகளும் குறிப்பிட்டுள்ளார்.

'தணிகை' என்ற சொல்லுக்குப் பொறுத்தல் (பொறை) என்று ஒரு பொருள் உண்டு.

அடியார்களின் பிழைகளையும் பாவங்களையும் பொறுத்து முருகன் தன் பக்தர்களுக்கு வரம் அளிக்கக் காத்துக்கொண்டிருக்கும் திருத்தலமே திருத்தணிகை. எனவேதான் லட்சக்கணக்கான பக்தர்கள் திருத்தணிகை முருகனைத் தம் குல தெய்வமாக வழிபட்டு நலம் பெற்று வருகிறார்கள்.

திருவிழா நாட்களில் பக்தர்கள் முருகன் திருப்புகழை ஓதியபடி திருத்தணிகையில் ஒன்று சேருவதை அருணகிரி நாதர், 'திருப்புகழ் ஓதும் கருத்தினர் சேரும் திருத்தணி மேவும் பெருமாளே' என்று பாடியுள்ளார்.

### வேறு சில பெயர்கள்

தொன்மைச் சிறப்பு வாய்ந்த திருத்தணிகைக்குச் சீர்காழியைப் போலப் பன்னிரண்டு பெயர்கள் உண்டு.

எல்லாச் செல்வங்களையும் தன்னிடம் கொண்டு நிறைவு பெற்ற தலமாதலால் 'ஸ்ரீபூரணகிரி' எனவும், பக்தர்கள் நினைத்த மாத்திரத்திலே முக்தியும் ஞானமும் அளிக்க வல்லது என்பதனால் 'க்ஷணிகாசலம்' (கணிக வெற்பு) எனவும், தேவேந்திரன் இங்கு முருகப்பெருமானை நீலோற்பலம் எனப்படும் கழுநீர் மலர்கொண்டு வழிபட்டதனால் 'கல்லார கிரி, கழுநீர்க் குன்றம்' எனவும் திருத்தணிகை வழங்கப்பெறுகிறது. இந்த வரலாற்றைத் திருநாவுக்கரசர் 'கல்மலிந்தோங்கும் கழுநீர்க் குன்றம்' என்று தமது திருத்தாண்டகத்தில் குறிப்பிடுகிறார்.

திருத்தணி கோயில் திருக்குளத்தின் ▷
அருகில் ஒரு காட்சி



அழியாமல் நிற்பதனுல் 'கற்ப சித்து' என்றும், சூரபத்மன் முதலிய அசுரர் களை முருகன் வெற்றிகொண்டு செருத் தணிந்த நிலையில் வந்து தங்கிய இடமா தலால் 'செருத்தணிகை' அல்லது 'திருத் தணிகை' என்றும், சிவபெருமானுக்குப் பிரணவத்தை உபதேசித்த இடம் என்ற கருத்தில் 'மூலாத்திரி, பிரணவார்த்த புரம்' என்றும், நாரதர் வழிபட்டதனுல் 'நாரதப்பிரியம்' என்றும், அகோரன் என்ற அந்தணனுக்கு முக்தி அளித்த இடம் என்பதனுல் 'அகோர கைவல்ய ப்ரதம்' என்றும் திருத்தணிகை பல சிறப் புப் பெயர்களைப் பெற்றிருக்கிறது.

## திருவுருவ நிலை

தணிகையில் வீற்றிருக்கும் முருகப் பெருமானுக்கு 'ஞானசக்திதரர்' என்று பெயர்.

முருகப் பெருமானுக்குப் பதினுறு வகையான சிறப்புத் திருவுருவங்கள் உண்டு. அவற்றுள் ஞானசக்திதரர் என்பது ஒரு வடிவம்.

முருகப் பெருமான் இரண்டு கைக ளுடன், வலக் கையில் ஞானவேல் ஏந்தி, இடக் கையைத் துடை மீது வைத்துக் கொண்டு மயில் இன்றித் தனித்து விளங் கும் வடிவம் ஞானசக்திதரர் தோற்ற மாகும்.

தணிகையில் கோயில் கொண்டி ருக்கும் முருகப் பெருமானின் மார்பில் சிறு பள்ளம் காணப்படுகிறது.

தாரகாசுரன் திருமாலிடமிருந்து விஷ்ணு சக்கரத்தைப் பறித்துக்கொண் டான். முருகன் தாரகாசுரனை வென்ற போது அவனிடமிருந்து விஷ்ணு சக் கரத்தைத் தாம் எடுத்துத் திருமாலுக் குப் பின்பு வழங்குவதற்காக, அதைச் சிறிது காலம் தமது மார்பில் வைத்துக் கொண்டார். இந்த நிகழ்ச்சியின் அடை யாளமாகத் தணிகை முருகனின் திரு மார்பில் ஒரு சிறு பள்ளம் ஏற்பட்டுள் ளது. அதன் மீது அணிவிக்கப் பெறும் சந்தனத்தைப் பக்தர்களுக்குப் பிரசாத



திருத்தணியில் ஆடிக் கிருத்திகையின்
போது காவடி தூக்கிச் செல்லும் பக்தர்கள்

மாக வழங்குகிருர்கள். இதைத் திரு மேனிப் பூச்சு (ஸ்ரீபாதரேணு) என்று கூறுவர்.

இந்தச் சந்தனத்தை உட்கொள்ளும் பக்தர்களின் நோய்கள் நீங்கும் என்று தணிகாசல புராணம் கூறுகிறது.



◁ குன்றின்மீது கோயில் கொண்டிருக்கும் குமரனைத் தரிசிக்கச் செல்லும் பாதையின் ஒரு தோற்றம்

### வழிபடும் முறை

திருத்தணிகையில் முருகன் கோயில் மலை மீது அமைந்துள்ளது. மலையுச்சிக்குச் சென்றதும் கிழக்குப் பிராகாரத்தில் உள்ள கொடிக்கம்ப விநாயகரை முதலில் தரிசிக்க வேண்டும். அதன் பின் ஐராவத யானையைத் தரிசித்து, பின்பு தெற்குப் பிராகாரத்திலுள்ள 'இந்திர நீலச் சுனை'யைத் தரிசிக்க வேண்டும். அதன் பிறகு கோயிலின் உட்பிராகாரத்திற்குச் செல்ல வேண்டும்.

அங்கு ஆபத்சகாய விநாயகரையும், அருகிலுள்ள வீரபாகு முதலிய நவவீரர்களையும், குமார லிங்கேச்வரரையும் தரிசித்த பின்பு மூல ஸ்தானத்திற்குச் செல்ல வேண்டும். அங்கு ஞானசக்திதரர் எனப்பெறும் தணிகை முருகனையும் அவனது இரு பக்கங்களிலும் உள்ள போக சக்திகளாகிய தெய்வயானை வள்ளியம்மை ஆகியோரையும் முறையே வழிபட வேண்டும்.

திருத்தணிகையின் வடதிசையில் நந்தியாறு என்ற ஆறு ஓடுகிறது. இது முருகனை வழிபடும் பொருட்டு நந்தியால் வரவழைக்கப்பட்ட ஆருகும். எனவே இந்த ஆற்றை 'நந்தியாறு' என்று சொல்கிறார்கள். இதன் வடகரையில் வீரட்டகாச ஈசுவரர், ஆறுமுக சுவாமி ஆகியோருக்கு உரிய கோயில்கள் அமைந்துள்ளன. தென் கரையில் விஜயராகவப் பெருமாள் திருக்கோயில் அமைந்துள்ளது.

### வழிபட்டு அருள் பெற்றோர்

திருத்தணிகை மலையை வலம் வரும் வழியில் வசிஷ்டர் முதலிய சப்த ரிஷிகள் முருகப் பெருமானை வழிபட்ட இடம் உள்ளது. அங்கு அவர்கள் அமைத்த ஏழு சுனைகளும் கன்னியர் கோயிலும் உள்ளன. இந்த இடத்தில் ஏழு மரங்கள் ஒன்ருகச் சேர்ந்து பின்னிப் படர்ந்து காணப்படுகின்றன. இப்போது இந்த இடத்திற்கு ஏழு சுனை, கன்னியர் கோயில் என்ற பெயர்கள் வழக்கில் உள்ளன. இந்த இடம் தவத்திற்கும் தியானத்திற்கும் ஏற்ற இடமாக அமைதியுடன் காணப்படுகிறது. இங்கே சப்த ரிஷிகள் வழிபாடு செய்தனர் என்பதை அருணகிரிநாதர் திருப்புகழில் குறிப்பிடுகிறார். இப்போதும் இந்த இடத்தில் பல சித்தர்கள் உள்ளனர் என்று சொல்லப்படுகிறது.

சிவன், விஷ்ணு, பிரம்மா ஆகிய மும்மூர்த்திகளும் திருத்தணிகை முருகனை வழிபட்டுள்ளனர். இதை அருணகிரிநாதர்,

**சிலைமகள் நாயன்**
**கலைமகள் நாயன்**
**திருமகள் நாயன்**
**தொழும் வேலா**

என்று திருப்புகழில் கூறியுள்ளார்.

இந்திரன், திருநந்தி தேவர், வாசுகி நாகம், அகத்தியர், நாரதர் முதலியோரும் இங்கு முருகனை வழிபட்டு அருள் பெற்றனர்.

'குருந்த மரத்தடியிலும், அடியார் சிந்தையிலும், வேதமுடியிலும் விளங்கும் குருநாதன் முருகன்; பழனியைச் சொல்லாலும், செந்திலை மனதாலும், தணி



# பூக்களால் அர்ச்சனை செய்யும் பலன்!

சத்துவகுணத்தை உடைய பூக்கள் வெள்ளெருக்கு, வெள்ளை அலரி, பிச்சி, சிறு சண்பகம், மந்தாரை, கொக்கிறகு, புன்னை, நந்தியாவர்த்தை, மல்லிகை, முல்லை, தும்பை முதலிய வெண்மை நிறப் பூக்களாகும். இவற்றினால் சாத்துவிக காலமாகிய மாலைநேரம், நடுயாமம், விடியற்காலை என்னும் காலங்களில் அர்ச்சித்தவர்கள் மோட்சத்தை அடைவார்கள்.

ராஜச குணத்தையுடைய செந்நிறம் கொண்ட பூக்களாகிய பாதிரி, செந்தாமரை, பட்டி, செவ்வலரி, செங்கடம்பு என்னும் பூக்களால் ராஜச காலமாகிய மத்தியான காலத்தில் அர்ச்சித்தவர்கள் போகத்தை அடைவார்கள்.

பொன்னிறம் பொருந்திய கொன்றை, சண்பகம், பொன்மத்தை முதலிய ராஜச, சாத்துவிக குணம் கொண்ட புஷ்பங்களால், பிராதக் காலத்தில் அர்ச்சித்தவர்கள் போகம், மோட்சம் என்னும் இரண்டையும் அடைவார்கள்.

வில்வம், துளசி, இருவேலிவேர், மருக்கொழுந்து, அறுகு, பச்சை முதலிய தாமச, ராஜச பத்திரங்களால் அர்ச்சித்தவர்கள் போக மோட்சத்தை அடைவார்கள்.

நீலோற்பலம் நீங்கலாக நீல நிறப் பூக்கள் தாமச குணத்தை உடையன. ஆகையால் அவை பூஜைக்குத் தகுதியற்றன ஆகும்.



கையை உடலாலும் வணங்க வேண்டும்' என்று அருணகிரிநாதர் குறிப்பிட்டுள்ளார். மேலும், அவர் முருகன் உபதேசித்தபடி பழநி, செந்தில், தணிகை ஆகிய மூன்றையும் பாடிய போது, 'தணிகையில் இணையிலி' என்று முருகனைப் போற்றியுள்ளார். முருகப்பெருமான் அருணகிரிநாதருக்குத் தணிகையில் திருவடிதீட்சை அருளினான். இதைக் கனவிலும் நனவிலும் தாம் மறப்பதற்கில்லை என்பதை 'வித பத யுகமலர் தந்த பேரருள் கனவிலும் நனவிலும் மறவேனே' என்ற திருப்புகழ்ப் பாடலில் அருணகிரிநாதர் நன்றியுடன் கூறுகிறார். இந்தப் பாடல் திருப்புகழ்ப் பாடல்களில் இதயமாக விளங்குகிறது என்று சொல்வது மரபு.

திருப்புகழில் 84 பாடல்களிலும், கந்தர் அலங்காரத்தில் மூன்று பாடல்களிலும், ஆறு கந்தர் அந்தாதியிலும், பன்னிரண்டு திருவகுப்பிலும் வேல், மயில் விருத்தங்களிலும் திருத்தணிகை நாதனை அருணகிரிநாதர் போற்றிப் பாடியுள்ளார்.

இடைக் காலத்தில் வாழ்ந்த முத்துசுவாமி தீட்சிதர், கச்சியப்ப முனிவர், ராமலிங்க அடிகள், பாம்பன் சுவாமிகள் ஆகியோரும் திருத்தணிகை முருகனைச் சிறப்பித்துப் பாடியுள்ளனர்.

## என்ன செய்ய வேண்டும்?

"மக்களுக்காக ஓர் அரசாங்கம் செய்ய வேண்டியது என்ன?" என்று நண்பர்கள் கன்பூஷியஸைக் கேட்டார்கள்.

"மக்களைப் பணக்காரராக்குவதுதான்" என்றார் கன்பூஷியஸ்.

"அதன் பிறகும் மேற்கொண்டு என்ன செய்ய வேண்டும்?" என்றார்கள் நண்பர்கள்.

"அடுத்தபடியாக மக்களுக்குக் கல்வி போதிக்க வேண்டும்" என்றார் கன்பூஷியஸ். அவ்விதம் சொல்லிவிட்டு மேலும் அவர் தொடர்ந்து, "ஓர் அரசாங்கத்தை நடத்த நல்ல ஒழுக்கமுள்ள அதிகாரிகளும் முக்கியம். மன்னர்கள் அல்லது ஆட்சியாளர்கள் தங்கள் சொந்த நடத்தை மூலமே மக்களை அத்தகைய ஒழுக்க புருஷர்களாக நடக்கும்படி செய்ய வேண்டும்" என்று குறிப்பிட்டார்.

-புரசை சிவம்

பிற்காலத்தில் மகானுகத் திக்ழ்ந்த முத்துசுவாமி தீட்சிதர் ஒரு சமயம் காசியில் இருந்தார். அங்கு அவர் சிதம்பர நாதரிடம் சங்கீதம் பயின்று ஸ்ரீவித்யா உபதேசமும் பெற்றார்.

காசியிலிருந்து முத்துசுவாமி தீட்சிதர் திரும்பி வரும் வழியில் தணிகைமுருகனைத் தரிசிக்கும் பொருட்டுத் திருத்தணிகைக்குச் சென்றார். அவர் தணிகை மலைமீது ஏறிச் சென்றபோது முருகப் பெருமானே ஒரு முதியவர் வடிவில் அவர்முன் தோன்றி, தீட்சிதரின் வாயில் ஒரு துண்டு கற்கண்டுக் கட்டியைப் போட்டு, "அது என்ன?" என்று கேட்டு மறைந்தார். உடனே அப்போது முத்துசுவாமி தீட்சிதருக்கு முருகன் வள்ளி தெய்வயானையுடன் மயில் மீது அமர்ந்த நிலையில் தரிசனம் அருளினன். மறுகணமே பரவசம் தோன்ற தீட்சிதர் முருகனே குருவாக வந்ததை உணர்ந்து, 'ஸ்ரீநாதாதி குரு குஹோ ஜயதி ஜயதி!' என்று துவங்கும் கீர்த்தனையைப் பாடினார்.

இவ்விதம் பிற்காலத்தில் சங்கீத உலகில் மும்மூர்த்திகளில் ஒருவராக முத்துசுவாமி தீட்சிதர் திகழ்ந்ததற்கு முருகனின் திருவருளே காரணமாக ஆயிற்று.

### உற்சவங்கள்

திருத்தணிகையில் ஒரு வருடத்தில் இரண்டு பிரம்மோற்சவங்கள் சிறப்பாக நடைபெறும். மாசிப் பெருவிழாவின்போது முருகனுக்கு வள்ளியம்மையுடனும், சித்திரைப் பெருவிழாவின்போது தேவசேனையுடனும் திருமண விழாக்கள் நடைபெறுகின்றன.

ஆடிக் கிருத்திகை விழா மிகப் பெரிய அளவில் திருத்தணிகையில் கோலாகலமாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. அப்போது எண்ணற்ற பக்தர்கள் பூக்காவடி செலுத்துகிறார்கள். பின்பு ஐப்பசி மாதத்தில் கந்தர் சஷ்டி விழா நடைபெறும்.

முருகன் சினம் தணிந்து எழுந்தருளிய இடம் என்பதனால் திருத்தணியில் மற்ற முருகன் தலங்களில் நடப்பது போல் 'சூரசம்ஹார' விழா நடப்பதில்லை. வைதிக முறையில் யந்திர பூஜை மட்டும் இங்கு உண்டு. மகா சிவராத்திரியின் போது 1008 சங்காபிஷேகம் நடைபெறும். டிசம்பர் 31—ஆம் தேதியும் ஜனவரி முதல் தேதியும் 'படி உற்சவம்' நடைபெறுகிறது.

கந்தப் பெருமான மற்ற எல்லாத் தலத்திலும் வீற்றிருப்பதைவிட, தணிகையில் தம்மை நாடி வரும் பக்தர்களுக்கு அருள் வழங்கும் விருப்பத்துடனும் மகிழ்வுடனும் சாந்தமுடனும் ஈடு இணையற்ற வகையில் வீற்றிருக்கிறான். இதை, 'சுந்தரக்கிரி தொல்புவிதனிற் பல எனினும் இந்த வெற்பினில் ஆற்றவும் மகிழ்ச்சி உண்டெமக்கே' என்று கந்தபுராணத்தில் முருகப் பெருமான் கூறுவதாகவே கச்சியப்ப சிவாசாரியார் பாடியுள்ளார்.

திருத்தணிகை முருகன் நம் பிறவிப் பிணி ஒய வழித்துணை வருவானாக! ★

படங்கள் உதவியவர்: தம்பையா

# தொண்டில் ஈடுபட ஒரு நல்ல வாய்ப்பு

அன்புள்ள வாசக நண்பரே!

கடவுளின் கிருபையை முன்னிட்டு எழுதுவது. வணக்கம் பல.

ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் கல்வி, கலாசாரம், மருத்துவம், பஞ்ச நிவாரண வேலைகள், கிராம முன்னேற்றம், சமய நூல்களை வெளியிடுதல், சமயப் பிரசாரம் போன்ற பல துறைகளிலும் பணிபுரிந்து வருவதைத் தாங்கள் அறிவீர்கள்.

ஸ்ரீராமகிருஷ்ணரும் சுவாமி விவேகானந்தரும் காட்டிய வழியில் விஜயம் (ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்) பத்திரிகை கடந்த 63 ஆண்டுகளாகத் தமிழக மக்களுக்கு அணிலைப் போன்று தன்னால் இயன்ற ஆன்மிகச் சேவையைச் செய்து வருகிறது.

விஜயம் பத்திரிகையுடன் எந்த விதத்திலேனும் தொடர்பு கொண்டுள்ள ஒவ்வொருவரும் ஸ்ரீராமகிருஷ்ணரின் தெய்விகக் குடும்பத்தைச் சேர்ந்தவரே ஆவர்.

விஜயம் பத்திரிகை வியாபார நோக்கத்தில் வெளியிடப்படவில்லை. நல்ல கருத்துக்கள் மேலும் மேலும் தமிழ்நாட்டில் பரவ வேண்டும் என்பதை மட்டுமே தலையாய நோக்கமாகக் கொண்டு, ஒரு தெய்வ கைங்கர்யமாக, சிரமத்தின் பேரில் நடத்தப்பட்டு வருகிறது.

சமீப காலமாக விஜயம் பத்திரிகை முழுவதும் ஆப்செட்டில் அச்சிடப்பெறுவதை அன்பர்கள் கவனித்திருப்பீர்கள்.

''ஆப்செட்டில் அச்சிடுவதற்குச் செலவு அதிகமாக ஆகும். குறைந்தது 20,000 பிரதிகளேனும் சர்க்குலேஷன் இருந்தால்தான் ஆப்செட்டில் அச்சிடுவதற்குக் கட்டுப்படியாகும். வியாபார நோக்கம் கொண்ட பத்திரிகைகளுக்கு மட்டுமே ஆப்செட்டில் அச்சிடுவது ஒத்து வரும். விஜயத்தை ஆப்செட் அச்சுக்கு மாற்றவே வேண்டாம்'' என்று பலரும் கருத்துத் தெரிவித்தனர்.

ஆப்செட்டில் அச்சிடுவதன் மூலம் பத்திரிகையின் தொண்டு இன்னும் நல்ல விதமாக இருக்கும் என்ற எண்ணத்தில், பலர் வேண்டாம் என்று ஆலோசனை தெரிவித்தும், விஜயத்தை ஆப்செட்டில் வெளியிடத் துணிந்து ஆரம்பித்துவிட்டோம். அதற்கு முக்கியக் காரணம், தைரியம் எல்லாமே விஜயம் வாசகர்தாம். அதாவது விஜயம் குடும்பத்தினராகிய அன்பர்கள் விஜயம் பிரதிகளின் விற்பனையைத் தாங்களே

அதிகப்படுத்தித் தந்துவிடுவார்கள் என்ற எங்களின் அசைக்க முடியாத நம்பிக்கைதான்.

ஆகவே விஜயம் பத்திரிகையின் விற்பனையை இரட்டிப்பாக்க, ஸ்ரீராமகிருஷ்ணரின் தெய்விகக் குடும்பத்தைச் சேர்ந்த நீங்கள் ஒவ்வொருவரும் குறைந்த பட்சம் ஒரு நபரையாவது விஜயத்திற்குப் புதிய சந்தாதாரராகப் பதிவு செய்தால்தான் பத்திரிகையின் உயர்ந்த நோக்கம் வெற்றி அடையும்.

இந்தக் கூப்பனையே நீங்கள் அனுப்ப வேண்டும் என்பதில்லை. ஆனால் அதில் கேட்டுள்ள தகவல்களை மட்டும் ஒரு கடிதத்தில் எழுதித் தெரிவித்தால் போதும்.

ஏன், நீங்கள் இதையே நல்ல ஒரு பரிசாக, உங்களுடைய உற்றார் உறவினர், நண்பர்களுக்கு அனுப்பக் கூடாது? உங்களால் முடிந்த வரையில் பலரைச் சந்தாதாரராக்குங்கள்!

கடவுள் தொண்டில்
அன்புள்ள
**சுவாமி தபஸ்யானந்தர்**

## உத்தரவுச் சீட்டு

சுவாமிஜிக்கு,

பின்வரும் அன்பர்களை விஜயம் வாசகர்களாக அதாவது புதிய சந்தாதாரர்களாகப் பதிவு செய்ய விரும்புகிறேன். ஆகவே அவர்களுக்குத் தவறாமல் தொடர்ந்து பத்திரிகைகளை அனுப்பி வைக்கவும். இது, நான் அவர்களுக்கு வழங்கும் ஒரு நல்லெண்ணப் பரிசாகும்.

**பெயர் அனுப்ப வேண்டிய முகவரி**

1.

2.

3.

4.

நான் இத்துடன் ஆண்டுச் சந்தாத் தொகை ரூ. 15 (ஆயுள் சந்தா ரூ. 180 அல்லது ஆயுள் சந்தா முதல் தவணை தொகை ரூ. ) மணியார்டர்/டி.டி. மூலம் அனுப்பியுள்ளேன்.

## திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி

# ஸ்ரீவேங்கடேசப் பெருமாள் ஊஞ்சல் சேவை

ஸ்ரீவேங்கடேசப் பெருமாள் எல்லாக் குணங்களையும் அவஸ்தைகளையும் கடந்து விளங்குகிறார். அவர் அவற்றால் பாதிக்கப்படவில்லை; அவைகள் அவரைப் பாதிக்கவும் முடியாது. ஆனால், பக்தர்கள் அந்த ஒப்பற்ற பரம்பொருளைத் தங்கள் உள்ளத்திலேயே உணர்ந்து அனுபவிக்கிறார்கள். ஆகையால் பக்தர்கள், ஸ்ரீவேங்கடேசப் பெருமாள் எப்போதும் உற்சாகமாகவும் சந்தோஷமாகவும் கவலையற்றும் இருந்து, தங்களுக்கு எல்லா விதமான சௌகரியங்களையும் சௌபாக்கியங்களையும் க்ஷேமங்களையும் கொடுத்துக்கொண்டிருக்க வேண்டுமென்று விரும்புகிறார்கள்.

இதுதான் திருமலையில் கண்ணாடி ஹால் எனப்படும் அயன மஹாலில் நாள்தோறும் நடத்தப்படும் ஊஞ்சல் சேவையின் தாத்பரியமாகும். இந்தச் சேவை ஒவ்வொரு நாளும் மாலையில் ஆறு மணிக்குப் பிறகு நடந்து வருகிறது. உற்சவ மூர்த்தி அழகாக அலங்கரிக்கப் பெற்ற ஊஞ்சலில் தம் தேவிமார்களுடன் எழுந்தருளுகிறார். கந்தம், சாமர உபசாரங்கள், வேதபாராயணம், பஜனை ஆகியவற்றுடன் ஸ்வாமி லேசாக ஊஞ்சல் ஆடுகிறார்.

மேற்கண்ட ஊஞ்சல் சேவை உற்சவத்தில் பங்கு கொள்ள விரும்பும் கிருகஸ்தர்கள் ரூ. 1000 செலுத்தித் தங்கள் குடும்பத்தில் ஆறு பேர்களுடன் இந்த உற்சவத்தில் கலந்துகொள்ளலாம்.

எக்ஸிக்யூட்டிவ் ஆபீசர்,
திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி

